

# சங்கநூல்களில் மரங்கள்

அறிஞர் பி.எல்.சாமி

# சங்கநூல்களில்

# மரங்கள்

சங்கநூல் அறிவியல் அறிஞர்

**பி. எல். சாமி** (ஐ.ஏ.எஸ். ஓய்வு)

**திருக்குறள் பதிப்பகம்**

66/1 பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,

சென்னை.600 078

முதற்பதிப்பு டிசம்பர் : 1992
உரிமை : ஆசிரியர்க்கு

விலை ரூ. 25.

அச்சிட்டோர் :

அமுதன் அச்சகம் 66, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர், சென்னை-78. போன் : 4834325

## நூல் உருவாக்கியோர்


| | |
|---|---|
| ஆசிரியர் | பி. எல். சாமி, (ஐ.ஏ.எஸ்.ஓய்வு) |
| ஓவியம் | கவிஞர் அமுதோன் |
| உருவச்சு | அண்ணாமலை |
| முகப்பு அச்சிட்டோர் | செ. அன்பு<br>அன்புஅச்சகம் |
| அச்சுக்கோப்பு | எம். எஸ். முருகன், இரமேஷ், சுந்தரி, விஜயா, மணிமேகலை, ஷர்மிளா, பரிமளா, |
| அச்சிட்டவர் | இரா. திருஞானம் |
| உதவி | தணிகாசலம் |
| அச்சகத்தார் | சு. அருள், சு. புகழேந்தி<br>அமுதன் அச்சகம்,<br>66, பெரியார் தெரு,<br>எம் ஜி ஆர் நகர்,<br>சென்னை - 600 078 |

# பதிப்புரை

புதுவை மாநிலம்
புகழின் தாய்நிலம்!

அந்த நாள் முதல்
இந்த நாள்வரை
அறிஞர்கள் தோன்றி
அறிவு வளம் சேர்த்துவரும்
அற்புதத் திருநிலம்!

ஆயிரத் தெண்ணூறு
ஆண்டுகட்கு முற்பட்ட
சங்கத் தமிழ்நூல்களில்
ஆழ்ந்தும் தோய்ந்தும்
ஆய்ந்தாய்ந்து
அறிவியல் சிறப்புகளை
அடுக்கடுக்காக எடுத்துரைக்கும்
அறிஞர் பெருமகனார்
அறிவியல் திருமகனார்

'பி எல். சாமி, ஐ.ஏ.எஸ். அவர்கள்
புதுவைக்குக் கிடைத்த
புகழ்மணியாக
சங்கத் தமிழ்மணியாக
ஒளி வீசி விளங்குகிறார்'
என்று புகழ்ந்தார்
திருமுடி சேதுராமனார்!

அயராத பேருழைப்பில்
ஆய்ந்து கூறும் அறிவியல்
உண்மைகள்
தமிழ்க் கவிகளின் ஆற்றலை
வெளிப்படுத்துகின்றன.

பழந்தமிழரின் வாழ்வியல் புலமை
அறிவியல் தெளிவு
அதன் தொடர்வரலாறு
இன்றைய நிலை ஆகியவற்றை
சங்கப்புலவர் தம்
சொல்லோவியங்களிலிருந்து
இன்றைய மேல்நாட்டு அறிவியல்
அறிஞர்தம் முடிவுகளோடு
ஒப்பிட்டுக் கண்டு
உவகை கொள்பவர்;

உள்ளம் உடல் உயிர்
உணர்வெலாம் சிலிர்க்க
ஆய்வில் ஊறித் திளைப்பவர்!

யாம் பெற்ற இன்பம்
பெறுக இத் தமிழ் வையம்
என்னும் பேரவாவினர்,
அறிஞர் பி. எல்.சாமி அவர்கள்.

அதனால்
திங்கள்தோறும்
'செந்தமிழ்ச் செல்வி' யில்
தம் ஆய்வு அநுபவங்களை
வெளியிட்டு வருகின்றார்.

அவற்றைச் சென்னை சேகர் பதிப்பகத்தார் தொடர்ந்து நூலாக வெளியிட்டு வருகின்றனர்.

மரங்களைப் பற்றிய ஒரு சிறு தொகுப்பாக இந் நூலை எமது திருக்குறள் பதிப்பகம் வெளியிட்டுப் பெருமையடைகிறது.

அறிஞர் பெருந்தகை பி.எல். சாமி
அவர்கட்கு எங்கள் நன்றியும்
வணக்கமும் கூறி,
இந் நூலைப் பணிவன்புடன்
தமிழன்பர்கட்குப் படைக்கின்றோம்.

பதிப்பகத்தார்

# இத் தோப்பிலுள்ள மரங்கள்!

# அத்தி

அதவம் என்றொரு மரம் கூறப்பட்டுள்ளது. இது அத்தி எனும் மரமாகும். சங்கநூல்களில் இரு பாடல்களில் கூறப் பட்டுள்ளது.

'அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க'

நற்றிணை 95

'ஆற்றயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து
எழுகுளிறு மிதித்த தொரு பழம்போல்'

குறுந்தொகை 27

அத்திப் பழம் வெளிர்சிவப்பாக இருக்கும். அதைப்போல் சிவப்பாக இருந்த மந்தியினுடை குட்டியின் முகத்தின் நிறத் திற்கு ஒப்பிடப்பட்டுள்ளது.

அத்திப் பழத்தை ஏழு நண்டுகள் மிதித்ததை குறுந் தொகைப் பாடல் கூறியுள்ளது.

அத்தியை Ficus glomerata என்று அறிவியலில் கூறுவர்.

# அரையம்

சங்க நூல்களில் ஆலமரக் குடும்பத்தைச் சேர்ந்த அரை என்ற அரசமரமும் இத்தி என்ற இச்சி மரமும் அதவம் என்ற அத்தி மரமும் கூறப்பட்டுள்ளது.

சங்க நூல்களில் ஒரே ஒரு பாடலில் அரையம் என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இதற்குக் குறிப்புரை எழுதிய உ. வே. சாமிநாதய்யர் அரயம் என்பதற்கு அரசமரம் என்ற பொருள் கூறியுள்ளார்.

'வேனில் அரையத்து இலைஒலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்'
ஐங்குறுநூறு 325

வேனிலில் வீசுகின்ற காற்றில் அரசமரத்தின் இலைகள் ஓசையிடுவதைக் கேட்டு, போகில் என்ற ஒருவகைப் புறா அதன் உணவான பழத்தைத் தின்னாது, பிறஇடம் செல்லும் என்று இந்த ஐங்குறுநூறுப் பாடல் கூறியுள்ளது.

காற்று வீசும்போது அரசமரம் ஓசையிடுவது உண்மை யான நிகழ்ச்சியே.

அரசமரத்தின் இலைக்காம்பின் அமைப்பு அதன் இலை யைச் சுழற்றி அடிக்கும் தன்மையுடையதால் மற்ற மரங் களின் இலைகளைவிட மிகுந்த ஓசை செய்யும்.

அரையம் என்ற பெயரில் ஒரு நகரம் இருந்ததாக, புறநானூற்று 202 ஆம் பாடல் கூறியுள்ளது.

இது நீடுநிலை அரையம் என்று அழைக்கப்பட்டுள்ளது.

சிற்றரையம், பேரரையம் என்று இரு பகுதிகளாக இந்த நகரம் இருந்தது.[1]

காஞ்சி, வஞ்சி என்ற நகரங்கள் மரங்களால் பெயர் பெற்றது போல, அரையம் என்ற நகரும் அரசமரத்தின் பெயராகத் தோன்றியிருக்க வேண்டும்.

தொல்காப்பியத்தில்,

> 'பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
> நினையுங் காலை அம்மொடு சிவணும்'
>
> எழுத்ததிகாரம் 284

என்று வரும் சூத்திரத்தில், அரையமரம் குறிப்பிடப் பட்டுள்ளது. அரையமான அரசமரத்தை Pipal tree என்றும் Ficus religiosa என்றும் அறிவியலில் அழைப்பர்.



1. 'ஹாரப்பா' என்பதில் அரப்பா என்னும் தமிழ்ச் சொல்லைக் காணலாம். அரை, அரையம், அரையர் முதலிய பழந்தமிழ்ச் சொற்கள் நினைக்கத் தக்கன.
— பதிப்பாளர்

# ஆசினி

'தண்கமழ் அலறிறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு'

திருமுருகாற்றுப். 300-302

'உண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண்ணரிந்து
அரலை உக்கன நெடுந்தாள் ஆசினி'

மலைபடுகடாம் 138-139

'உடம்புணர்வு தழீஇய ஆசினி யனைத்தும்
குட்மலைப் பிறந்த தண்பெருங் காவிரி'

மலைபடு. 526-527

'நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்'

அகம். 91

'கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
ஆசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்'

புறம். 153

'பிடியொடு மேயும் புன்செய் யானை
அடியொதுங்கு இயக்கம் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்
கருவிசைக் கவணையில் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
யாசினி மென்பழம் அளிந்தவை உதிராத்'

கலித்தொகை 41

'இருஞ்சோறு ஆடிய நுதல, கொல்களிறு
பேதை ஆசினி ஒசித்த
வீததர் வேங்கைய மலை கிழவோற்கே'

நற்றிணை 51

சங்கநூல்களில் ஆசினி என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இது ஒரு பலா மர வகையாகும். ஈரப் பலா என்று உரையாசிரியர்கள் பொருள் கூறுவர்.

இந்த மரம் மலைகளில், காடுகளில் இருப்பதாகச் சங்க நூல்கள் கூறுவது இயற்கைச் செய்தியே ஆகும்.

கருங் குரங்குகள் இதன் பழத்தை விரும்பி உண்பதாகச் சங்கநூல்கள் கூறியுள்ளன இதன் விதைகள் தரையில் உதிர்ந்து பரல்கற்களைப் போல இருந்ததை மலைபடுகடாம் பாட்டு கூறியுள்ளது.

பலாவில் பல வகை உண்டு. நாம் உண்ணும் பலாவை Artocarups Integra என்று அறிவியலில் அழைப்பர்.

ஆசினிப்பலா இக்காலத் தமிழில் ஆயினிப்பலா என்றும் பேய்ப்பலா என்றும் அழைக்கப்படுகிறது.

ஆசினிப் பலா, பலகைகள் செய்வதற்கு மிகவும் பயனுடையதாகும். இதனுடைய மரம் விலை உயர்ந்ததாகும்.

இது கேரளாவில் மிகுதியாக விற்கப்படுகின்றது. அங்கு இந்த மரத்தின் பெயர் ஆயினி அல்லது அயினி (Aini) என்பதாகும். இப்பெயர் ஆசினி என்ற சங்ககாலப் பெயரி னடிப்படையாகப் பிற்காலத்தில் தோன்றியதாகும்

இம் மரத்தை அறிவியலில் Artocarpushirsuta என்பர்.

# ஆத்தி (ஆர்)

'ஆர்புனை தெரியல்நின் முன்னோர் எல்லாம்'
—புறம். 43

'நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே'
நின்னொடு
'பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே'
—புறம். 45

'யார்கொல் அளியர்தாமே ஆர்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணி'
—புறம். 31

கவைஇலை ஆரின் அம்குழை கறிக்கும்'
—அகம். 104

'கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்'
பொருநராற்றுப்படை 148

'கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்'
சிறுபாணாற்றுப்படை 65

சங்கநூல்களில் ஆர் எனும் ஆத்திமரம் கூறப்பட்டுள்ளது. இது ஒரு குறு மரமாகும்.

இதைக் கண்டுகொள்ள இதன் இலை உதவுகின்றது. கவையிலை ஆர் என்று அகநானூறு கூறியுள்ளது. இதன் இலை இரண்டாகப் பிரிந்து கவைத்து இருப்பதால் காட்டில் எளிதில் ஆத்தியைக் கண்டு கொள்ளலாம்.

ஆத்தியின் நாரில் மாலை (கண்ணி) புனைவது பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதைத் திருவாத்தி என்றழைப்பர்.

ஆத்தி மரங்கள் நிறைந்த பகுதியை ஆர்க்காடு என அழைத்தனர். தென்னார்க்காடு, வட ஆர்க்காடு எனும் பெரும் நிலப் பகுதியை ஆர் எனும் ஆத்திமரங்களின் பெயரா லேயே அழைக்கப்படுகிறது. இதுவும் கருதத் தக்கது.

ஆர் என்ற குற்றுச் செடியை பற்றி புறநானூறும், மணிமேகலையும், சிலப்பதிகாரமும் கூறியுள்ளன.

'வேம்பும் ஆரும் போந்தையும் மூன்று
மலைந்த சென்னியர் அரணித்தக வில்லர்'

புறம். 338

'ஆர்கொல் அளியர் தாமே — ஆர்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணீர்'

—புறம். 81

'ஊர் கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே'

—புறம். 82

'ஆர்புனை தெரிய விளங்கோன் நன்னாற்'

மணிமேகலை 19: 125

'ஆரங் கண்ணியீற் சாற்றினன் வருவோன்'

—மணிமேகலை 4 : 56

மற்றும் சிலப்பதிகாரப் பதிகத்தில் (12) ஆரங்கண்ணிச் சோழன் என்று அழைக்கப் பட்டுள்ளான். புறநானூற்றிலும் மணிமேகலையிலும் சோழமன்னர் அடையாளப் பூவாக அணிந்த ஆரங்கண்ணி கூறப்பட்டுள்ளது.

ஆத்தியை அறிவியலில் Bauheuia Racgemosa என்றழைக்கப்படும்.

17

# ஆலம்

சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள மரங்களில் மிகப் பெரிய மரம் ஆலமரமாகும். இந்த மரம் பல ஆண்டுகள் வாழ்ந்து, விழுதுகளை விட்டு மிக அகலமாக வளர்வதாகும்.

இந்த மரம் நீண்டகாலம் வாழ்ந்து நடுமரத்தை இழந்து விழுதுகளால் தாங்கப்பட்டு வாழும்.

ஆலமரம் வெகுகாலம் வாழ்வதால் இதைத் தொன் மூதாலம் என்று சங்கப்பாடல்கள் கூறியுள்ளன.

'பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல'

குறுந்தொகை 15-2

'துணைகால் அன்ன புனைதேர்க் கோசர்
தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்புஇகுத்து இரங்க'

—அகநானூறு 251 -8

தொன்மூதாலம் என்று சொல்வதால் ஆலமரம் நீண்ட காலம் வாழும் தன்மை தெரிகின்றது.

ஆலமரம் பல விழுதுகள் விடுவதுபற்றிப் பல சங்கப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன.

தாதொரு மறுகின் ஆபுறந் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை'
—நற்றிணை 343-4

'வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலிஅவிந் தன்றிவ் அழுங்கல் ஊரே'
—அகநானூறு 70-16

'நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரிஅரை ஆலத்து
ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை'
—அகநானூறு 287 -7

மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை
பிணிவீழ் ஆலத்து அலங்குசினை ஏறிக்
கொடுவில் எயினர் குறும்பிற்கு ஆக்கும்'
அகநானூறு 319-2

நெல்லி நீடிய கல்அறைக் கவாஅன்,
அத்த ஆலத்து அலந்தலை நெடுவீழ்
தித்திக் குறங்கில் திருந்த உரிஞ'
—அகநானூறு 385-9

நீயே தண்புனற் காவிரிக் கிழவனை இவனே
முழுமுதல் தொலைந்த கோளி ஆலத்துக்
கொழுநிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத்து
ஆங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்
செல்லாது'
—புறநானூறு 58

'சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் விழுன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட்டோன்றிற் றான்பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்'

—நாலடியார் 197-1

'கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
ஆலம்வீழ் போலும் அமைச்சனும் - வேலின்
கடைமணிபோல் திண்ணியான் காப்பும்இம்
மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்.'

திரிகடுகம் 33-2

ஆலமரம் நடு மரத்தை இழந்த போதிலும் அதன் விழுதுகள் மரத்தைத் தாங்குவதை ஓர் உவமையாக நாலடியாரும் புறநானூறும் கூறியுள்ளன. அவ்வாறு மரத்தைத் தாங்குவது முதியவர் இறந்த பிறகு பிள்ளைகள் தங்கள் குடும்பத்தைத் தாங்குவதற்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளது.

ஓர் அரசனின் செங்கோலை அமைச்சன் ஆலம் விழுதுகளைப் போல் தாங்க வேண்டும் என்று திரிகடுகம் குறிப்பிட்டுள்ளது.

புறநானூறு, மலைபடுகடாம் ஆகிய சங்கநூல்கள் ஆலமரத்தைக் 'கோளி ஆலம்' என்று குறிப்பிட்டுள்ளன.

'நின்னுரை செல்லும் ஆயின், மற்று
முன்ஊர்ப் பழுனிய கோளி ஆலத்துப்
புள்ஆர் யாணர்த்தற்றே என்மகன்
வளனுஞ் செம்மலும் எமக்குஎன நாளும்'

—புறம். 254

'சூரியறிந் தவையவை குறுகாது கழிமின்
கோடுபல முரஞ்சிய கோளி யாலத்துக்
கூடியத் தன்ன குரல்புணர் புள்ளி
னாடுகா ணனந்தலை மென்மெல வகன்மின்'

—மலைபடுகடாம்-268

நிகண்டுகளில் 'கோளி' என்பதற்குப் பூவாமல் காய்க்கும் மரம் என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

ஆலமரத்தின் பூ வெளியே தெரியாது. இதன் பூக்களில் மகரந்தச் சேர்க்கை பூச்சிகளினால் நடைபெறுகின்றது. இந்த முறையான மகரந்தச் சேர்க்கையை Cryptogamy என்று செடிநூலில் சொல்லுவர்.

பூக்களில் மகரந்தச் சேர்க்கை நடைபெறுவது வெளிப் படையாகத் தெரிவதில்லை. ஆனால் பூவாமல் காய்க்கும் என்று கூறியது சரியில்லை. பூக்கள் வெளியில் தெரியாமல் இருப்பதால் இவ்வாறு கூறப்பட்டது.

பூவின் அரும்பும் காய்போலவே இருக்கும். எனவேதான் இத்தகைய கருத்து தோன்றிற்று.

ஆலமரத்தின் கனிகளைப் பற்றியும் சங்கப் பாடல்கள் கூறுகின்றன.

'புதுக்கலத் தன்ன கனிய ஆலம்
போகில்தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்
தண்ணிய இனிய ஆக
எம்மொடுஞ் சென்மோ விடலை நீயே'

—ஐங்குறுநூறு 303-1

'கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல உண்டனம் என்னாது, பின்னும்
செலவு ஆனாவே கலிகொள் புள்ளினம்' — புறம். 199

ஆலமரத்தின் கனி புதுப்பானை போன்று இருந்ததாக ஐங்குறு நூற்றுப் பாடலில் (303) கூறப்பட்டுள்ளதைக் கவனிக்கவேண்டும். ஆலமரத்தின் பல கனிகளை விரும்பி புண்பதற்குப் பறவைகள் நாடி வருவது பல சங்கப் பாடல்களில் சொல்லப்பட்டுள்ளது.

மலைபடுகடாத்தில் ஆலமரத்தில் பலவகைப் பறவைகள் ஒலித்ததைக் 'கூடியத்தன்ன' (orchestra) என்று குறிப்பிட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

ஆலமரத்தில் பச்சைப்புறா, மற்றும் பிற புறா வகைகள் மைனா, காக்கை முதலிய பறவைகள் விரும்பிப் பழத்தைத் தின்னும்.

பல விழுதுகளுடைய ஆல மரத்தின் அடியில் நிழலில் இராமன் தனது படையுடன் கோடிக்கரையில் தங்கியிருந்த போது இராவணனை வெல்லமந்திராலோசனை செய்தான். அப்போது ஆலமரத்திலிருந்து பலவித பறவைகள் இரைச்ச லிட்டு இராமனது மந்திராலோசனைக்கு இடையூறு புரிந்ததால் இராமன் அப்பறவைகளின் இரைச்சலை அடக்கினான்.

அவ்வாறு இராமன் கோடிக்கரையில் பல பறவைகளின் ஒலியை அடக்கினான் என்பதை 'வெல்போர் இராமன் அடக்கினன்' என்று அகநானூறு (70) குறிப்பிடுவதைக் கவனிக்கவேண்டும். இன்றும் இந்தக் கோடிக்கரையில் பல வகைப் பறவைகள் வலசை (Migration) வருவதைக் கருத வேண்டும். 2000 ஆண்டு காலமாகக் கோடிக்கரையில் பல வகைப் பறவைகள் வந்து சேர்ந்து தங்குவது குறிப்பிடத் தக்கதாகும்.

ஐங்குறுநூற்றுப் (303) பாடலில் ஆலமரத்திற்கு வந்த 'போகில்' என்ற ஓர் அரிய பறவையைப்பற்றிச் சொல்லப் பட்டுள்ளது. 'புதுக் கலத்தன்ன கனிய வாலம் போகில் பறவைதனைத் தடுக்கும்' என்று கூறப்பட்டுள்ளது. இது அரிய செய்தியாகும்.

ஆலமரம் பழுத்த காலத்தில் வரும் சிலவகைப் புறாக் களில் 'போகில்' என்பது மிக அரிதான பறவையாகும். இந்தப் போகில் பறவையை மலையாளத்தில் 'போகனா' என்று அழைப்பர். இப் பறவை மிக விரைவாய்ப் பறக்கும் தன்மையதாகும்.

அரிதான இப் பறவையைக் கொல்லக்கூடாது என்று தற் போது தடை போடப் பட்டுள்ளது. இப் பறவையை ஆங்கிலத்தில் Imperial Pigeon என்பர்.

'விசும்பின் நுண்துளி மாறிய உலவை
அம்காட்டு

ஆல நீழல் அசைவு நீக்கி'

நற்றிணை 76-3

'அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்'

பரிபாடல் 4-67

விழுதுடன்கூடிய ஆலமரம் கிளைகளைப் பரப்பி வளர் வதால் இதன் நிழலில் போர்ப்படைகளும் தங்குவது வழக்க மாக இருந்தது.

'தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல'
—குறுந்தொகை 15-2

துணைகால் அன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்'
—அகநானூறு 251-8

கோசர் என்ற போர்வீரர் படையுடன் ஓர் ஆலமரத்தின் நிழலில் தங்கியதுபற்றிக் குறுந்தொகையும், அகநானூறும் கூறியுள்ளன.

'ஆலமரத்தின் அடியில் இவ்வாறு படையுடன் கூடுதலைப் 'பொதியில்' என்று இச்சங்கப் பாடல்கள் கூறுவதைக் கூர்ந்து நோக்க வேண்டும். கோடிக்கரையில் இராமன் தன் படையுடன் ஆலமரத்தினடியில் தங்கினான் என்பதை 'வெல்போர் இராமன் அருமறைக் கவித்த பல்வீழ் ஆலம்போல' என்ற அகநானூறு (70) கூறுவதினின்று உணரலாம்.

'அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு மன்னர்க் கிருக்க நிழலாகும்மே' என்று கூறியதுபோல, ஒரு போர்ப் படையே, பல விழுதுகளை விட்டுப் பரந்த ஆலமரத்தின் நிழலில் தங்கலாம். அவ்வாறு கோசர் என்ற போர்ப்படையாளர் ஆலமரத்தின் நிழலில் தங்கியதாகக் கூறப்பட்டுள்ளது.

இலங்கையில் இருந்த ஓர் ஆலமரத்தின் நிழலில், ஒரு சிற்றூரே தங்கியதாகக் கூறப்பட்டுள்ளது.

ஆந்திர மாநிலத்தில் உள்ள ஓர் ஆலமரத்திற்கு 200 விழுதுகள் இருந்ததாகவும் 2000 சதுர அடிகள் பரவியிருந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

கல்கத்தாவில் உள்ள மரஞ் செடி கொடிப் பூங்காவில் (Botanical garden) 460 விழுதுகள் இருந்தன. இந்த மூதால மரத்தை நானும் பார்த்திருக்கின்றேன் இதன் அடிமரம் செத்துவிட்டது. ஆனால் இம் மரத்தின் விழுதுகள் மரத்தைத் தாங்கிக்கொண்டிருக்கின்றன.

சங்ககாலத்தில் இது போன்ற தொன் மூதால மரங்கள் இருந்ததால் மாபெரும் போர்ப்படைகளே இம் மரத்தின் நிழலில் தங்கியிருந்துள்ளன.

சங்ககாலத்தில் மக்கள் ஆலமரத்தைத் தொழுது வந்தார்கள். ஆலமரத்தைக் 'கடவுள் ஆலம்' என்று பல சங்கப் பாடல்கள் குறிப்பிடுவதைக் கவனிக்க வேண்டும்.

'கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனம் என்னாது பின்னும்' புறம். 99-1

'தாது எரு மறுகின் ஆபுறந் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை'

நற்றிணை 343-4

சங்ககாலத்தில் மக்கள் ஆலமரத்தின் அடியில் பலி செலுத்தினர். இங்குப் படைத்த புளிச்சோற்றைக் காக்கைகள் வந்து தின்றதை நற்றிணை 343 கூறியுள்ளது.

செங்கல்லினால் கட்டப்பட்ட கோயிலில் ஆலமரம் முளைத்துக் கோயிலையே இடித்ததைப்பற்றி அகநானூறு 287 கூறியுள்ளது.

'நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரிஅரை ஆலத்து
ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை'

அகநானூறு 287-7

ஆலம்பழத்தைத் தின்ற பறவைகளின் எச்சத்தினால் ஆலம் முளைத்து வேர்விட்டுப் பெரிதாகிப் பின்னர், கட்டடம் தகரும் நிலையை நாம் இன்றும் பல இடங்களில் கண் கூடாகக் காணலாம்.

ஆலமரங்கள் நிறைந்திருக்கும் காட்டை ஆலங்கானம் என்றழைப்பது வழக்கமாகும்.

திருவாலங்காடு என்னும் ஊரில் சிவபெருமான் நடனம் ஆடுவதைக் காரைக்காலம்மையார் கண்டு பாடியிருப்பதும் தெரிந்ததேயாகும்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனைப்பற்றிச் சங்கநூல்களில் செய்தி வந்துள்ளது. தலையாலங்கானம் என்று சொல்லப்பட்டிருப்பதால் இடையாலங்கானம், கடையாலங்கானம் ஆகிய ஊர்களும் இருந் திருக்கலாம் என்று தோன்றுகின்றது.

ஆலமரத்தைச் செடிநூலில் Ficus Bengalenis என்று ழைப்பர். ஆங்கிலத்தில் Banyan tree என்றழைப்பர்.

ஆலமரம் மிக அகலமாக வளர்வதால் ஆலம் என்று பெயர் பெற்றதாகத் தெரிகின்றது. மலையாளத்தில் பேரால் என்றழைப்பர்.

---

மேற்கோள்—The Flora of madras Presidency
—J. S Gamfle

# இத்தி மரம்

'வேனில் இற்றித் தோயா நெடுவீழ்
வழிநார் ஊசலின் கோடை தூக்குதொறும்
துஞ்சுபிடி வருடும் அத்தம்'

நற்றிணை 162

'புல்வீழ் இற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரைஇழி அருவியின் தோன்றும் நாடன்'

குறுந்தொகை 106

'கல்இவர் இற்றி புல்லுவன ஏறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு'

ஐங்குறுநூறு 279

'புகல ஏக்கற்ற புல்லென் உலவைக்
குறுங்கால் இற்றிப் புன்தலை நெடுவீழ்
இருப்பிணர்த் துறுகல் தீண்டி, வளிபொர,
பெருங்கை யானை நிவப்பின் தூங்கும்' அகம். 57

'காடுகவின் பெறுக-தோழி ஆடுவளிக்கு
ஓங்குநிலை இற்றி ஒருதனி நெடுவீழ்
கல் கண் சீக்கும் அத்தம்' அகம். 345

'கல்அதர்க் கவலை போகின், சீறூர்ப்
புல்அரை இத்திப் புகர்படு நீழல்' அகம். 77

இற்றி என்ற மரம் சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளது. இது இக்காலத்தில் இச்சி என்றழைக்கப்படும். இது ஆலின் இனத்தைச் சேர்ந்ததாகும். இதன் இலை வேல் போன்று இருக்கும் (leaf oblong, lanceolate) என்று நற்றிணை கூறியுள்ளது, அறிவியற்படி உண்மை.

இதன் தோயா நெடுவீழ் கூறப்பட்டுள்ளது காண்க. இந்த மரத்தின் விழுது, ஆலமரத்தின் விழுது போல நிலத்தில் தோய்வது இல்லை. ஆல மர விழுது போல் நீண்டதும் இல்லை; குறுகிய விழுதை (Short stilt roots) உடையது. அதனால் 'புல்வீழ்' என்றழைக்கப்பட்டது.

நற்றிணையில், இற்றியின் விழுது கோடைக்காற்றுத் தூக்கும்போது, யானையின் முதுகை வருடுவதாகக் கூறப்பட்டுள்ளது.

இந்த இற்றி பாறைக்கற்களில் பெரும்பாலும் வளர்ந்து காணப்படும். இதைச் சங்கநூல்கள் குறிப்பாகக் கூறியுள்ளன.

| | |
|---|---|
| இற்றிக் கல்லிவர் வெள்வேர் | — குறுந்தொகை 106 |
| கல்லிவர் இற்றி | — ஐங்குறுநூறு |
| நெடுவீழ் துறுகல் தீண்டி | — அகம். 57 |
| கல்கண் சீக்கும் | — அகம். 345 |
| கல்லதர்க் கவலை | — அகம். 77 |

என்ற வரிகளில் கல்லொடு தொடர்புபடுத்தி இந்த இற்றி மரம் கூறப்படுவதைக் காணலாம்.

கல்லில் காணப்படுவதால் கல்லிச்சி என்று இப்பொழுது அழைக்கின்றனர்.

சங்கநூல்களில் ஒரே ஒரு பாட்டில் இத்தி என்றழைக்கப்பட்டுள்ளது. மலையாளத்தில் இத்தியால் என்றழைப்பர்.

இத்தியை அறிவியலில் Ficus Retusa என்றழைப்பர்.

★

# இரத்தி

இரத்தி என்ற மரம் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது.

'உழையுணிந்த உண்ட இறைவாங்கு உயர்சினைப்
புல்வரை இரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்காடு இறந்தும் எய்தவந் தனவால்'

நற்றிணை : 113

'குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு
இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து' புறம். : 34

'மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி யலங்குபடு நீழல்' புறம். : 325

'விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்கு
இருந்தொடர்ப் படுக்கும் இரத்தி மன்றமும்'

மணிமேகலை : 6 58-59

இரத்தி மரத்தை இலந்தை என்று உரையாசிரியர்கள் கூறியுள்ளனர்.

உ. வே சாமிநாதய்யர் புறநானூறு 325ஆம் பாட்டின் அடிக்குறிப்பில், இரத்தி இந்தி மரம் இலந்தையுமாம் என்று கூறியுள்ளார்.

இரத்தி, இத்தியாக இருக்க முடியாது. இத்தி மரத்தைத் தனியே சங்கநூல்கள் குறிப்பிட்டுள்ளன.

மேலும், உழை அணந்து இறைவாங்கி பழத்தைத் தின்னு மளவு தாழ்வாகவோ வளையக் கூடியதாகவோ இத்திமரம் இல்லை. ஆதலின் இம் மரத்தை இலந்தை என்றே கொள்ள வேண்டும்.

மணிமேகலை, கருகாட்டில் மாய்ந்தோர் உடைதலை யைக் கோத்து இரத்திமன்றத்தில் வைத்ததாகக்கூறியுள்ளது.

சில ஆண்டுகளுக்கு முன் கல்கத்தாவில் உள்ள காளி கோயிலில் அறுத்த ஆட்டின் குடலை இலந்தை மரத்தில் தொங்க விட்டதை நானே பார்த்திருக்கின்றேன்.

இரத்தி மரத்தை Zizyphus Jujuba என்று அறிவியலில் அழைப்பர்.

# இலஞ்சி

'மகளிரன்ன துணையொடு வதியும்
நிழன்முதி இலஞ்சி பழனத் ததுவே'

ஐங்குறுநூறு 94

இந்தப் பாட்டில் வரும் இலஞ்சி என்ற சொல்லுக்குச் சரியான பொருள் மகிழம் என்று குறிப்பு உரையில் கூறப் பட்டுள்ளது. மற்றும் குளம் என்றும் பொருள் கூறப்பட் டுள்ளது.

'கூனும் குருடும் ஊமையும் செவிடும்
அழுகுமெய் யாளரு முழுகினர் ஆடிப்
பழுதாக் காட்சி நன்னிறம் பெற்று
வலஞ் செயாக் கழியும் இலஞ்சி மன்றமும்'

சிலம். 5-118-121

இப் பாட்டிற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார், இலஞ்சியென்பதற்குப் பொய்கை என்று பொருள் கூறினார். உ. வே சாமிநாதய்யரும் அடிக்குறிப்பில் மடு என்று பொருள் கூறினார்.

அடியார்க்கு நல்லார் மேலும் தந்துள்ள உரை விளக்கத்தில், 'இலஞ்சியை மகிழென்பார்க்குக் காவிரியில் நீராடி வந்து மகிழைச் சூழ்ந்தென்ன வேண்டுதலின் மகிழினும் மன்றினும் பயமின்றாதலின் அங்ஙனம் கூறுதல் பொருந்த மின் றொழிக்க' என்று கூறியுள்ளார்.

அடியார்க்கு நல்லார்க்கு முந்திய உரையாசிரியர் ஒருவர் இலஞ்சி என்பதற்கு மகிழ் என்று பொருள் கூறியுள்ளது, அடியார்க்கு நல்லாரின் விளக்கத்திலிருந்து புரிகிறது. இவர் சேர நாட்டினராக இருக்க வேண்டும். ஏனெனில் இன்றும் கேரளத்தில் தான் இலஞ்சி என்பது 'இலைஞ்ஞி' என்று மாற்றி மகிழ மரத்திற்கு வழங்குகின்றனர்.

ஆதலின் 'இலஞ்சி' என்ற சொல் பொய்கையையும் மகிழ மரத்தையும் பண்டைக் காலத்தில் குறித்தாகக் கருதலாம்.

இலஞ்சி என்ற மகிழ மரத்தை Mimosops elengi என்று அறிவியலில் அழைப்பர்.

★

# இலுப்பை

'ஆடுதளிர் இருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அன்றமிசைத் தாஅம்'

அகம். 135

'புல்லரை இருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை எண்கின் இருங்கிளை கவரும்'

அகம். 149

'கீழ்ப்படு தாரம் உண்ணா மேற்சினை
பழம்போல் சேற்ற தீம்புழல் உணீஇய
கருங் கோட்டு இருப்பை ஊரும்
பெருங்கை எண்கின் சுரனீறந் தோரே'

அகம்.171

'யாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த இருப்பைக் குழைபொதி குவியிணர்
கழல்துளை முத்திற் செந்நிலத்து உதிர'

அகம். 225

'வெருக்கடி யன்ன குவிமுகிழ் இருப்பை
மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கால் எண்கின் ஈரினங் கவர'

அகம். 267

'திரளரை யிருப்பைத் தொள்ளை வான்பூக்
குருளை எண்கின் ஈரினங் கவரும்'

அகம். 321

'நீடுநிலை அரைய செங்குழை இருப்பைக்
கோடு கடைந்தன்ன கொள்ளை வான்பூ

' ஆடுபரந் தன்ன ஈனல் எண்கின்
சேடுசினை யுரீஇ உண்ட பிச்சில்' அகம். 331

'சுழலிலை யுகுத்த கால்பொரு தாழ்சினை
அழலகைந் தன்ன அங்குழைப் பொதும்பிற்
புழல்வீ யிருப்பைப் புள்காட்டத்தும்' அகம். 351

இலுப்பை மரத்தைச் சங்க நூல்களில் இருப்பை என்று அழைத்தனர். இலுப்பை மரம் பலருக்கும் தெரிந்ததே யாகும். இலுப்பை மரம் மிக முக்கியமான மரமாகும்.

(A large and hansome decidious tree one of the most important in some respect the most important of Indian tree).

நீடுநிலை அரைய மரம், குதிர்க்கால் மரம், திரளரை மரம் என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.'

பொரிந்த பட்டைகளை அடிமரத்தில் உடையது.(Bark mearly smooth with vertical cracks). நீண்ட துளை யுடைய பூவைத் 'தொள்ளை வான் பூ' என்று கூறியுள்ளனர்.

இலுப்பை மரத்தின் பூ துய்த்தலை இறவிற்குச் சங்க நூல்களில் ஒப்பிடப்பட்டுள்ளது. இலுப்பை மரத்தின் பூவில் மகரந்தத் தாள்கள் நீண்ட மயிருடையதாகக் (Anthers long hairy on the back) கூறப்பட்டுள்ளதால் மீசையுடைய இறவு, இறா இலுப்பைப் பூவுடன் ஒப்பிடப்பட்டுள்ளது.

**உவமைகள்**

இலுப்பையின் பூவிதழ்கள் தடித்து வெண்மையாக வெண்ணெய்போல் காணப்படும். அதனால் இலுப்பையின் பூவிதழை 'இமுதின் அன்ன தீம்புழல்' என்றழைத்துள்ளனர்.

இலுப்பையின் வெண்மையான பூ ஆலங்கட்டி மழை வீழ்வது போல் வீழ்வதாகக் கூறப் பட்டுள்ளது. காம்பிலிருந்து பூ வீழ்வதை 'ஆர்கழல் புதுப்பூ' என்று கூறப்பட்டுள்ளது.

இலுப்பையின் குவிந்த வெண்மையான பூ சங்கை அறுத்தால் இருக்கும் கழங்கு போல மிக வெண்மையாக இருந்ததாக ஒரு பாடல் கூறியுள்ளது. பூத்த இலுப்பையின் குவிந்த பூக்கள் முத்து கழன்று உதிர்ந்தது போன்று இருந்ததாக உவமை கூறப்பட்டுள்ளது.

காட்டுப் பூனையின் பாதத்தைப்போன்று குவிந்த இலுப்பைப் பூ இருந்தது என்பது அழகான உவமையாகும். காட்டுப்பூனை நகத்தை உள்ளே இழுத்து மெத்தென்று இருக்கும் விரல்கள், குவித்த அவிழாத இலுப்பைப் பூவின் இதழ்களோடு உவமிக்கப்பட்டுள்ளது.

தந்தத்தைக் கடைந்தாற் போன்று இலுப்பையின் வெள்ளிய பூக்கள் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

இலுப்பையின் தளிர் சிவப்பாக இருக்கும். ஆதலின் செங்குழை இருப்பை என்று அழைக்கப் பட்டுள்ளது. அழலகைந்தன்ன அங்குழைப் பொதும்பு என்று இலுப்பையின் நெருப்புப் போன்று சிவந்த நிறமுடைய இளந்தளிர்களைக் குறிப்பிட்டுள்ளது.

இலுப்பையின் வெண்பூவைக் கரடிகள் விரும்பி உண்ணும். இலுப்பைப் பூ இனிப்புடையது. 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை' என்ற பழமொழி வழங்குவதைக் காணலாம்.

நன்றாகத் தடித்த இதழ்கள் கீழே கம்பளம் விரித்தாற் போன்று உதிர்ந்து கிடக்கும். இதையே கரடிகள் விரும்பி உண்ணும். கரடிகள் இலுப்பை மரத்தின் உச்சியில் ஏறிப் பூக்களைப் பறித்துத் தின்னும். கீழே கிடக்கும் உணவான

இலுப்பைப் பூவை உண்ணாது, மரத்தின் மேலே பழம்போல் சதைப் பற்றுடைய இலுப்பைப் பூவைத் தின்னும் என்று அகநானூறு (171) கூறியுள்ளது, உண்மையான செய்தியாகும்.

வடநாட்டில் வாழும் கோண்டர் (Gonds) ஆகிய திராவிடப் பழங்குடிகள் இலுப்பைப் பூவிலிருந்து ஒருவகை மது வைத் தயாரித்துப் பருகிக் களிப்பர். இந்தப் பழக்கம் பழங்குடிகளிடம் பழக்கமாக உள்ளது.

இலுப்பைப் பூவிலிருந்து ஒருவகை பண்ணியாரத்தையும் செய்வர் என்று சொல்லப்பட்டுள்ளது.

இலுப்பை மரத்தை ஆங்கிலத்தில்'Mahua Tree' என்றும் அறிவியலில் 'Madhuca Indica' என்றும் அழைப்பர்.

# இல்லம்

'குல்லை குளவி கூதளம் குவளை
இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்'

நற்றிணை 376

'கலம்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்'

கலித்தொகை 142 :64-65

'மூல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ'

அகம். 4

'சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ
முல்லை இல்லமொடு மலைக் கல்ல'

அகம். 364

'வண்டுஅறைஇய சண்பகநிரை, தண்பதம்
மனைமாமரம் வாள்வீரம்
சினைவளர் வேங்கை. கணவிரி காந்தள்'
பரிபாடல் 11: 18-20

'தேறுபடி சில்ஙீர் போலத் தெளிந்து
மாறு கொண்டு ஓரா மனத்தின ளாகி'
மணிமேகலை 141-142

'படுகாழ் படுத்துத் தேய்வை உறீஇக்
கலுழி நீக்கும் கம்மியர் போல
மகர வீணையின் மணமாக கழிஇ'
-பெருங்கதை 1-35: 215-218

'நின்றார் உள்ளத் தேறுரைக்க
நீத்தற் தெளிவது எனத் தெளிந்து'
பிரமோத்திர வஞ்சுளை முத்தி 99

இல்லம் என்றொரு மரம் சங்கநூல்களில் கூறப் பட்டுள்ளது. இந்த மரத்தின் விதையை அரைத்து, கலத் தில் உள்ள கலங்கிய குடிநீரில் போட்டால் அழுக்கு கீழே தங்கிவிடும். மேலே உள்ள நீர் குடிக்க ஏற்றதாக இருக்கும். இதைக் கலித்தொகைப் பாடல் (142) கூறியுள்ளது.

The fruits contain a very large quantity of mucilage. which when thrown in to mu.jdy water carries down the mud and cleanze the water). பெருங்கதையும் கூறியுள்ளது.

ஆனால் இவைகட்கு முந்தியதாகக் கருதப்படும் சங்க நூல்களான அகநானூறு நற்றிணை ஆகிய நூல்களில் இல்ல மரத்தின் பூ முல்லையொடு கொன்றையொடு மலர்ந்ததையும் கண்ணியில் கட்டி அணிந்ததையும் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

ஆதலின் சங்ககாலத்தில் இல்ல மரத்தின் விதை கலங் கிய நீரை தெளிவாக்குவதற்குப் பயன்படுத்தினரோ என்பது விளங்கவில்லை.

சங்க நூல்களில் இந்த மரத்திற்கு இல்லம் என்ற பெயரே வழங்கியுள்ளது. பரிபாடல் முதலில் மனைமரம் என்று இம் மரத்தை அழைத்துள்ளது. மணிமேகலைதான் முதலில் தேற்றா என்ற பொருளில் தேறு என்று அழைத்துள்ளது. இல்லமரத்தை இக்காலத்தில் தேற்றா மரமென்றுஅழைக்கின் றன. மலையாளத்தில் இந்தத் தேற்றா மரக்கொட்டையை ஆயுர் வேத மருந்தில்மகப்பேறுக்குப் பயன்படுத்துகின்றனர்.

சங்ககாலத்தில் இந்த மரத்தை வீடுகளில் வளர்த்து வந்ததால் இல்லம் என்று பெயர் பெற்றது.

இல்லமரத்தை, மனைமரத்தை Strchynos potatorum என்று அறிவியலிலும் Clearing nut tree என்று ஆங்கிலத் திலும் அழைப்பர்.

# உழிஞ்சில்

சங்க நூல்களில் உழிஞ்சில் என்றொரு மரம் கூறப்பட் டிருக்கிறது. இது வாகை இனத்தைச் சேர்ந்தது. வாகையுடன் நெருங்கிய ஒற்றுமையுடையது.

'வந்திறல் கடு வளி பொங்கர்ப் போந்தென
நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்ப நம்'

—குறுந். 39

'வாடல் உழிஞ்சல் விளை நெற்று அம் துணர்
அடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்பக்
கோடை நீடிய அகன் பெரும் குன்றத்து'

—அகம். 45

'[4]கள்ளி அம் காட்ட கடத்திடை உழிஞ்சில்
உள் ஊன் வாடிய சுரிமுக்கு நொள்ளை
பொரி அரை புதைத்த புலம்புகொள் இயவின்'

—அகம். 53

'பொரிஅரை உழிஞ்சிலும் புன் முளி மூங்கிலும்'

—சிலப். 11:76

'தான்றியும் ஒடுவையும் உழிஞ்சிலும் ஓங்கி'

—மணிமே. 6:80

'கலைமான் தலையின் முதன்முதல் கவர்த்த
கோடல் அம் கவட்ட குறுங் கால் உழிஞ்சில்
தாறுசினை விளைந்த நெற்றம் ஆடுமகள்
அரிக்கோல் பறையின் ஐ என ஒலிக்கும்'

—அகம். 151

'உழுஞ்சில் அம் கவட்டிடை இருந்த பருந்தின்'

புறம். 370

இந்த உழிஞ்சில் மரத்திற்கும் நெற்று இருப்பதாகக் கூறப் பட்டுள்ளது.

வெம்மையுடன் விரைந்து வீசுகின்ற பெருங் காற்றால் உழிஞ்சில் மரத்தில் காய்த்துத் தொங்கும் நெற்றின் வற்றல் (சலசலத்து) ஆர்ப்பதாகக் குறுந்தொகையில் (39) கூறப் பட்டுள்ளது.

உழிஞ்சில் நெற்று ஆடு களத்துப் பறை ஓசை போல அரித்துக்கொண்டு ஒலிக்கும் என்று அகநானூறு அறிவிக் கின்றது.

ஆடுமகள் அரிக்கோல் பறையில் செய்யும் ஒலியினைப் போல் உழிஞ்சிலின் நெற்று செய்யும் ஓசை அகநானூற்றில் (151) காணப்படுகிறது.

* உழுஞ்சில் என்பதும் ஒரு பாடமாகவுள்ளது.

## கலைமான் கொம்புபோல்...

மேலும், குறுகிய கால் உடைய உழிஞ்சிலின் கவட்டுக் கொம்பு கலைமான் தலையில் முதன்முதல் தோன்றிய கவர்த்த கொம்பு போன்று இருந்தது என்று கூறியது அழகிய உவமையாகும். இந்த உவமையின் பொருத்தத்தை வனப் பாதுகாப்பாளர் நன்கு உணர்ந்து மகிழ்வர்.

உழிஞ்சில் மரம் வாகையிலிருந்து வேறொரு மரமாயினும் இரண்டிற்கும் காணப்பட்ட ஒற்றுமையால் பழைய உரையாசிரியர் மயங்கினர்.

சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார், (11:76) உழிஞ்சில் மரத்தை வாகை என்றே கருதிக் கூறியுள்ளார்.

வாகையும் உழிஞ்சிலும் நெற்றுடையதாலும் காற்றில் ஒலிப்பதாலும் ஒன்றே என்று மயங்கினர்.

உழிஞ்சிலை இக் காலத்தில் உசிலை என்று அழைக்கின்றனர்.

இதன் தழையை வெயிலில் காய வைத்துப் பொடியாக்கி எண்ணெய்த் தலை முழுக்குக்கு அரப்பு செய்கிறார்கள்.

உழிஞ்சிலை அறிவியலில் Alpizzia Amara என்று வழங்கப்படுகிறது.

# உன்னம்

உன்னம் என்றொரு மரம், பதிற்றுப்பத்திலும் புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளதை இங்கே காண்போம்.

'திருந்து சிறை வளைவாய்ப் பருந்து இருந்து உயவும்
உன்ன மரத்த துன் அருங் கவலை'
—புறம். 3

'அலந்தலை உன்னத்து அம் கவடு பொருந்திச்
சிதடி கரைய, பெரு வறம் கூர்ந்து'
—பதிற்றுப். 23; 3,4

'புன்கால் உன்னம் சாய, தெண் கண்
வறிது கூட்டு அரியல் இரவலர்த் தடுப்ப'
—பதிற்றுப். 40; 17,18

'பொன்னின் அன்ன பூவின், சிறியிலை,
புன்கால். உன்னத்துப் பகைவன், எம் கோ'
—பதிற்றுப். 61: 5,6

உன்ன மரத்தின் அடிமரம் புல்லியது என்று பதிற்றுப் பத்துப் பாடல் இரண்டும் கூறுவதால், இதன் அடிமரம் வலிமையுடைய தல்ல என்பது தெரிகிறது.

சங்ககாலத்து உன்னம், தற்காலம் உனு, உன்னு என்று பேச்சு வழக்கில் அழைக்கப்படுவதால், இந்த மரம் எது

வென்று தெரிந்து கொள்ளலாம். அது GRENIA TILIL FOLIA என்பதாகவே இருக்க வேண்டும்.

இது 12 மீட்டர் உயரம் வளரும். அடிமரத்தின் அகலம் (சுற்றளவு) 1.3 மீட்டர் இருக்கும்.

ஆகவே இதைப் புல் கால் உன்னம் என்று பதிற்றுப் பத்துப் பாடல் குறிப்பிட்டது.

இதன் இலை சிறியது என்று செடி நூலார் கூறுவர் இம் மரத்துப் பூக்களின் இதழ்கள் மஞ்சள் நிறம் என்று செடி நூலார் கூறுவர்.

மஞ்சள் பூக்கள் இருப்பதால், 'பொன்னின் அன்ன பூ' உடையதாகப் பதிற்றுப்பத்து நூல் கூறுவது பொருத்தமாக உள்ளது.

இதன் இனமான செடியாக வளர்வது 'கஞுன்னு' என்று தற்காலத்தில் அழைக்கப் பெறுகிறது.

பதிற்றுப்பத்திலும் தொல்காப்பியத்திலும் உன்ன மரத்தைப் பற்றி வருகின்ற ஒரு செய்தி ஆராயத் தக்கதாகும்.

உன்னமரம் நிமித்த மரம் என்று சொல்லப்பட்டுள்ளது. இது நிமித்தம் பார்த்த வழி, வெற்றியுண்டாயின் குழைந்தும் இன்றாயின் கரிந்தும் காட்டும் என்பர்.

தொல்காப்பியத்தில், போரில் உன்ன நிலை கூறப் பட்டுள்ளது.

'முன்னங் குழையவுங் கோடை மொய்தளிரின்
நுன்னங் குழைமொலித் தோங்குவாய்—மன்னரைக்
கொன்று களங்கொள்ளும் கொல்யானை வேந்தனை
வென்றுகளங் கொன்றாமேல் வேந்து.'

—தொல். புறத்திணையியல்,
நச்சினார்க்கினியர் மேற்கோள்

'துன்னரு தானைத் தொடுகழலான் துப்பெதிர்ந்து
முன்னர் வணங்கார் முரன்முருங்க— மன்னரும்
ஈடு எலாந் தாங்கி இகல்வித்தார் நீயும்நின்
கோடுஎலாம் உன்னம் குழை.'

—புறப்பொருள் வெண்பாமாலை
மேற்கோள்

வேந்தடுக்கிய உன்ன நிலையும் — வேந்தனை உன்ன மரத்துடன் அடுக்கிக் கூறப்பட்ட உன்ன நிலையும் என்றது,

'வேந்தன் கருத்தன்றி அவன் மறவன்
வேந்தர்க்கு வென்றி கொடுத்தால்
யான் நினக்கு இன்னதுசெய்வ லெனப் பரவுதலும்
எம்வேந்தற்கு ஆக்க முள்ள தெனின்
அக் கோடு பொதுளுக வெனவும்
பகை வேந்தர்க்கு கேடு உள்ளதெனிற்
அக் கோடு படுவதாக லெனவும்
நிமித்தங் கோடல்'

என நச்சினார்க்கினியரும்,

'உன்ன மென்பது மரம்; அது
தன் காட்டகத்தே கேடு வருங்கால்
உலறியும்
வாராக் காலம் குழைந்து நிற்கும்'

என்று இளம்பூரணரும் உரைத்த தொல்காப்பிய (தொல். புறத்திணை–5) உரைகளிலும்

உன்ன மரம் நிமித்த மரம் என்பதற்கு விளக்கம் கூறப் பட்டுள்ளது.

'உன்னம் சாய' என்று பதிற்றுப்பத்து குறித்தது, நார் முடிச் சேரலின் பகைவர்கள் நிமித்தம் பார்த்தவழி, அவர்க்கு வெற்றி இன்மையின் உன்னம் கரிந்து காட்டியது' என்று பழைய உரைகாரர் கூறியுள்ளார்.

பகைவரொடு பொரக் கருதி
நிமித்தம் பார்த்தவழி
உன்னங் கரிந்து காட்டிற்றாக
அதனால் தனக்கு வெற்றி அன்றெனக் கருதித்
தவிர்த்திராது, மேற்சென்று பொருது
பகைவரை வென்று
அதன் நிமித்தத்தைப் பொய்ப் படுத்தலின்
பாரியை உன்னத்துப் பகைவன்

என்று பழைய உரை கூறுகிறது.

அகநானூற்றில் (65) உன்னம் என்னும் சொல்லுக்கு கருத்து எனப் பொருள் வரையப்பட்டுள்ளது.

'உன்னம் கொள்கையொடு உவம் கரந்து உறையும்
அன்னை சொல்லும் உய்கம்.'

உன்ன மரம் 'கருத்து அறியும் மரம்' என்ற பொருளில் வழங்கியிருக்கலாம்.

ஆனால், தொல்காப்பியத்திலும் பதிற்றுப்பத்திலும் நிமித்தங் காட்டும் மரமாக குறித்துள்ளபடி இப்போது உன்ன மரம் இல்லை.

ஆனால், Premna lati folia என்ற மரத்தின் இலைகள் முதிர்ந்தபோது நீல நிறமாகவோ அல்லது கரிந்தோ காணப்படும். அதை இக் காலத்தில் முன்ன என்றழைக்கின்றனர். ஆனால் இம் மரங்களை நிமித்தம் பார்க்கும் காலத்தில் வெற்றி வரும் என்பதற்காகக் குழைவிட்டு வரும் என்பது உண்மையில்லை.

○

# ஒடு

ஒடு என்ற மரம் பற்றி மூன்று பாடல்களில் செய்திகள் வருகின்றன.

'உடும்பு இழு தறுத்த ஒடுங்காழ் படலை
சீறில் முன்றிற் கூறுசெய் திடுமாரி'

—புறநானூறு 325

'கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்'

அகநானூறு 91

'தோன்றியும் ஒடுவையும் உழிஞ்சிலும் ஓங்கிக்
கான்றையுஞ் சூரையுங் கள்ளியும் அடர்ந்து'

மணிமேகலை 6.80-81

ஒடு என்ற மரத்தைத் தொல்காப்பியமும் 'ஒடு மரக் கிளவி' (தொல்: உயிர் சூ 60) கூறியுள்ளது. இதிலிருந்து ஒடு ஒரு மரம் என்று தெரிகின்றது.

ஒடு மரத்தின் வைரம் பாய்ந்த காலை வேலியாக உடைய சிறிய முன்றில் என்று புறநானூறு கூறியுள்ளது. இன்றும் ஒடு மரம் சிலவிடங்களில் வேலியாகப் பயன் படுகின்றது.

இந்த ஒடு மரம் கறையான்களால் அழிக்கப்படா திருப்ப தனால் இம்மரத்தை வேலிக்குப் பயன்படுத்தினர்.

வேறொரு அகநானூற்றுப் பாடல் ஓடுங்காடு என்று ஓடுவ மரங்கள் நிறைந்த காட்டைப் பற்றிக் கூறியுள்ளது. மணிமேகலை ஓடு மரத்தை ஓடுவம் என்று அழைத்துள்ளது.

வறண்ட இடங்களில் காணும் கள்ளி முதலிய செடிகளுடன் ஓடுவையும் வைத்துக் கூறியது உண்மையான செய்தியேயாகும். இதை அறிவியலில் (Cleistanthus Collinus என்றழைப்பர். இப்பொழுது ஒடுவ மரம் என்று சிற்றூர்களில் அழைக்கப்படுகின்றது.

# ஓமை

'இருங் கழி முதலை மேஎந்தோல் அன்ன
கருங்கோல் ஓமைக் காண்புஇன் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை ஈன்றுஇளைப் பட்ட' அகம்-3

'மூளிந்த ஓமை முதையல் அம்காட்டுப்
பளிங்கத்து அன்ன பல்காய் நெல்லி' அகம்-5

'என்றூழ் நின்ற புன்தலை வைப்பில்
பருந்துஇளைப் படூஉம் பாறு தலைஓமை' —அகம்-21

'வெருவரு கவலைஆங்கண் அருள்வரக்
கருங்கால் ஓமை ஏறி வெண்தலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட்டு ஆங்கண்'
—அகம்117

'ஓமைஅம் பெருங்காட்டு வருஉம் வம்பலர்க்கு
ஏமம் செப்பும் என்றூழ் நீள்இடை' —அகம்-191

நிழல்இல் ஓமை நீர்இல் நீள்இடை —அகம்-223

'சூர்முதல் இருந்த ஓமைஅம் புறவின்
நீர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்' —அகம்-297

'உவர்எழு களரி ஓமைஅம் காட்டு
வெயில்வீற் றிருந்த வெம்புஅலை அருஞ்சுரம்'
—நற்றிணை 84

'அருவி ஆன்ற நீர்இல் நீள்இடைக்
கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைச்சிய முடத்தாள் ஓமை
அருஞ்சுரம் செல்வோர்க்கு அல்குநிழல் ஆகும்
குன்ற வைப்பின் கானம்' நற்றிணை 137

'சேயின் வரூஉம் மதவலி யாவுயர்ந்து
ஓமை நீடிய கான்இடை அத்தம்'
—நற்றிணை 198

'உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்'
—நற்றிணை 252

'பொருத யானைப் புண்தாள் ஏய்ப்பப்
பசிப்பிடி உதைத்த ஓமைச் செவ்அரை'
—நற்றிணை 279

'பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தன மாக

நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி
ஒடித்துமிசை கொண்ட ஓங்குமருப்புயானை' — நற் 318

'இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்அரை ஓமை நீடிய
புலிவழங்கு அதர கானத்தானே' — ஐங்குறு. 316

'உறுதலைப் பருந்தின் உளிவாய்ப் பேடை
அலறுதலை ஓமை அம்கவட்டு ஏறிப்
புலம்புகொள விளிக்கும் நிலங்காய் கானத்து'
— ஐங்குறு . 321

'கானயானை தோனயந்து உண்ட
பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை
அலங்கல் உலவை ஏறி ஒய்யென' — குறுந். 79

'உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு — குறுந். 124

'அத்த ஓமை யங்கவட் டிருந்த
இனந்தீர் பருந்தின் புலம்புகொடு எள்விளி' — குறுந். 207

'எளிதென வுணர்ந்தனள் கொல்லோ முளிசினை
ஓமை குந்திய உயர்கோட்டு ஒருத்தல்
வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவா அன்' — குறுந்.396

'பொரிபுற ஓமைப் புகர்படு நீழல்
வரிநுதல் யானை பிடியோடு உறங்கும்
எரிமயங்கு கானஞ் செலவுரைப்ப நில்லா'
— ஐந்திணை எழுபது 37

'மண்ணெடுத்துஉண்ணும் அண்ணல் யானை
வண்தேர்த் தொண்டையர் வழையமல் அடுக்கத்துக்
கன்றில் ஓரா விலங்கிய
புன்தாள் ஓமைய சுரனிறந் தோரே' — குறுந். 260

'புல்இலை ஓமைய, புலிவழங்கு அத்தம்' —நற்றிணை 107
'அலறுதலை மராமும் உலறுதலை ஓமையும்'
சிலப் - காடுகாண்காதை 75

ஓமை மரத்தின் அடிமரத்துப் பட்டை முதலையின் மேல் தோல் போல இருப்பதாகவும் கரியதாகவும் இருக்குமென்றும் அகநானூற்றில் கூறப்பட்டுள்ளது.

முதலையின் மேந்தோலன்ன என்று கூறிய உவமை மிகவும் சிறந்ததாகும். N.L. Bor என்ற வனத்துறை அறிஞர் இவ்வகையாக நெடுக்கிலும் குறுக்கிலும் பொரிந்து காணப் படும் பட்டையை Crocodile Skin bark என்று தமது நூலில் கூறியுள்ளார்.

இதே உவமை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சங்க நூலில் பயன்படுத்தப்பட்டிருப்பது எண்ணி இன்புறத்தக்கது. Bark dark brown and rather rongh and ¼ inch thick என்று இந்த மரத்தின் பட்டையைப்பற்றி அறிவியலில் கூறுவர்.

பொரி தாள் ஓமை என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

நீடிய ஓமை, ஓங்கு நிலை ஓமை, நெடுஞ்சினை ஓமை என்று ஓமையின் நெடிய தன்மை கூறப்பட்டுள்ளது.

ஓமை மரம் 100 அடி உயரம் வரை வளரும் என்று கூறுவர். இந்த மரமானது மேற்குத் தொடர்ச்சி மலைகளில் பச்சிலைகளுடன் (Evergreen) காணப்படுகின்றது. இந்த மரத்தைக் கடும் வெயில் காலத்தில் நீர் வறண்ட சூழ்நிலையில் பெரும்பாலான சங்கப் பாடல்கள் கூறியுள்ளன.

இந்த மரத்தின் சூழ்நிலையில் யானை சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

'புல்லரை யோமை நீடிய பிறங்குமலை புலிவழங் கதர கானத் தானே' என்று ஐங்குறு நூறும் (316);

'புல்லிலை ஓமைய புலி வழங் கத்தம்' என்று குறுந்தொகையும் (107) கூறுவதால் புலி காணப்படும் சூழ்நிலையான அடர்ந்த காடுகளில் ஓமைமரம் காணப்படும் என்பது தெரிகின்றது.

ஆனால், சங்க நூல்களில் பல பாடல்களில், கடு வெயி லில் நீரற்ற வறண்ட சூழ்நிலையில் காணப்பட்ட காடு களில் ஓமை மரம் கூறப்பட்டுள்ளது.

ஓமையின் உள்மரம் எப்படியிருக்குமென்றும் ஒரு சங்கப்பாடல் கூறியுள்ளது. சண்டையிட்ட யானையின் புண்ணுடைய தாள் போன்று ஓமையின் செவ்வரை அதாவது சிவந்த அடிமரம் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. (The wood is dark red or reddish brown and contains a resin which is similar to the valuable capaiba balsam. N. L. Bor in the manual of Forest Botany)

இந்த மரம், கருஞ்சிவப்பாக இருப்பதகவும் இந்த மரத்தில் ஒருவகைத் தைலம் இருப்பதாவும் வனத்துறை அறிஞர் கூறியுள்ளதைக் காணலாம்.

இந்த மரத்தை உறுதியாகக் கண்டுகொள்ள ஒரு செய்தி உதவுகின்றது. இதன் அடிமரத்தைத் துளைத்தால் நான் கிலிருந்து பதினாறு காலன் வரை ஒருவகை தைலத்தைத் தரும் என்று வனத்துறையினர் கண்டுள்ளனர்.

(when the heart wood of Kingidendron pinnata rs tapped atree yields 4 - 16 gallons of oleo iesin and can be tapped again after. a decade— Indian Forester November; 1928)

இந்தக் தைல எண்ணெய்யை யானை அடிமரத்தை குத்திக் கொண்டதாகக் குறுந்தொகைப்பாடலிலிருந்து (396) அறிந்து கொள்ளலாம்.

'ஓமை குத்திய உயர்கோட் டொருத்தல்' என்று கூறி யிருப்பதால் யானை குத்தியது இந்தத் தைல எண்ணெயை உண்ணவேயாகும் என்று கருதவேண்டியுள்ளது.

இவ்வாறு தைல எண்ணெய் தரும் மரம் Kingiodend ron Pinnata என்ற மரமாகும். இதுவே ஓமையாகும்.

இதுபோன்றே ஆச்சாவின் அடிமரத்தைக் குத்தித் தைல எண்ணெயை உட்கொள்வதைக் குறுந்தொகை 255 ஆம் பாடல் கூறுவதையும் காணலாம். யானை ஓமையின் கிளைகளை ஒடித்து உண்பதும் ஓமை மரத்தைச் சாய்த்து உண்பதும் கூறப்பட்டுள்ளது.

ஓமையும் ஆச்சாவும் நெருங்கிய ஒரே இனத்தைச் சேர்ந்த மரங்களாகும். ஓமையைச் சென்னைப் பல்கலைக் கழக அகராதி 'உவா' என்று தவறுதலாகக் கூறியுள்ளது. உவா, உகாவாக இருந்தால் அதுவேறு மரமாகும்.

உகாயைப் பற்றிச் செல்வியில் எழுதியுள்ளேன். இது போன்றே யா என்று சங்க நூல்களில் அழைக்கப்படும் ஆச்சாவை Shorea Robusta என்று சென்னைப் பல்கலைக் கழக அகராதி கூறுகின்றது. இது மிகவும் தவறு. Shorea Robusta தென்னிந்தியாவில் இயற்கையில் காணமுடியாத மரமாகும். வட நாட்டில் காணப்படும் இம்மரத்தைச் சாலமர மென்று அழைப்பர்.

ஓமையைத் தற்காலத்தில் மடையன் சாம்பிராணி என்ற ழைப்பர், இதன் தைலத்திலிருந்து ஒருவகை சாம்பிராணி செய்வர். சிலவிடங்களில் கொளவு என்றுமழைப்பர். இதை ஆங்கிலத்தில் Malabar Mahagony என்றழைப்பர்.

---

ஆங்கில மேற்கோள் நூல்கள்:

1. Manual of Inbian Forest Botany-
N. L. Bor.

2. Flora of the Presidency of Madras—
T. S. Gandhi.

# கடு மரம்

கடு என்ற மரம் சங்கநூல்களில் ஒரே ஒரு பாட்டில் கூறப்பட்டுள்ளது.

'கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பில்'

—மலைபடுகடாம் 14

கடுக்காய் பல மருந்துகளில் பயன்படுவது. கள்ளக் குறிச்சியடுத்த கல்வராயன் மலைகளில் இன்றும் மிகுதியாகக் காணப்படுகின்றன. கடுக்காய் மரத்தை அறிவியலில் Terminalia chebula என்றழைப்பர்.

# கண்டல்

சங்கநூல்களில் கண்டல் என்றொரு மரம் கூறப்பட்டுள்ளது. இது நெய்தல் திணைக்குரியதாகக் கூறப்பட்டுள்ளது.

'கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்
தெண்திரை மணிப்புறந் தைவருங்
கண்டல் வேலிநும் துறைகிழ வோற்கே'

— நற்றிணை 54

'வெண்புறம் ஒசிய வார்க்கும் தெண்கடல்
கண்டல் வேலிய ஊர் அவன்'

நற். 74

'வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடிப்
புலவுத்திரை உதைத்த கொடுந்தாள் கண்டல்'

நற். 123

'கண்டல் வேலிக் காமர் சிறுகுடி
எல்லிவந் தன்றோ தேர்எனச் சொல்லி'

நற். 191

'கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை'

நற். 207

'கானல் கண்டல் கழன்று உகுபைங்காய்
நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென'

நற். 345

'கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்
தெண்கடல் நன்னாட்டுச் செல்வன் யானென'

நற். 363

'இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்
திண்திமில் விளக்கம் எண்ணுங்
கண்டல் வேலிக் கழிநல் லூரே'

நற். 372

'பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇய ரண்டர்'

குறுந். 117

'அழுவ நின்ற வலர்வேய் கண்டல்
கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்
பெயர்தரப் பெயர்தந் தாங்கு' குறுந். 340

'கண்டற் கானற் குருகினம் ஒலிப்ப
கரையா டலவன் அளைவயிற் செறியச்'
அகம். 260

'தண்டித் தண்டிற் றாய்ச்செல் வாரும்
கண்டற் றண்டதே திரை நுரை தூவாரும்'
பரிபாடல் 10 : 100, 101

'அறிகரிதி யார்க்கு மரவநீர்ச் சேர்ப்ப
நெறி திரிவார் இன்மையால் இல்லை'
— முறிதிரிந்த

கண்டலந்தண் டில்லை கலந்து கழிசூழ்ந்த
மிண்டலந்தண் தாழை யிணைந்து'

திணைமாலை நூற். 61

'கண்ட லவிர்பூங் கதுப்பினாய் இன்னாதே
கொண்ட விரதக் குறைவு'

சிறுபஞ்சமூலம் 14

சங்க நூல்களில் கண்டல் என்ற மரம் கடற்கரையிலும் கழிகளிலும் இருந்தன என்று கூறப்பட்டுள்ளது. கடலோரச் சதுப்பு நிலக்காடுகளில் கண்டல் மரம் காணப்படுகின்றது. இக் காலத்தில் சிதம்பரத்தை யடுத்துள்ள பிச்சாவரம், மூத்துக்காடு என்ற ஊர்களில் காணப்படுகின்றது.

கழிநீர்ச் சதுப்புக்காடுகளில் (Mangrove forasts) கண்டல் என்ற பெயர் வழங்குகின்றது.

கண்டல் என்னும் பெயர் அக் காடுகளில் மட்டும்காணப் படும் மூன்று நான்கு வகை மரங்களுக்குப் பொதுப்பெயராக வழங்குகின்றது.

ஆயினும் சிறப்பாகக் கண்டல் என்ற பெயர் Rhizho phora Mucronota என்பதற்கே வழங்கப்படுகின்றது.

இதைத் தெலுங்கில் கண்ட்லா என்றும் கன்னடத்தில் கண்டுல என்றும்அழைப்பர். Avicinnia officinalis என்ற மரமும் தற்காலத்தில் வெண்கண்டல் என்று அழைக்கப்படு கின்றது.

மற்றும் கடற்கரை சதுப்பு நிலத்தில் காணப்படும் ஒரு மரம் காய்க்கண்டல் என்றழைக்கப்படுகிறது. இதை Bruguiria Conjugata என்றழைப்பர்

ஆண்கண்டல் என்ற மரம் மலையாளத்தில் பேச்சு வழக்கில் உள்ளது.

இதை Ceriopcondolleana என்று செடி நூலில் அழைப்பர்.

துவர்க்கண்டல் என்ற பெபர் தமிழில் பேச்சுவழக்கில் வழங்கப்படுகிறது. இதை. Kandelia Rheedi என்று செடி நூலில் அழைப்பர்.

இதைப் பூக்கண்டல் என்று பேச்சுவழக்கில் அழைப்பர்.

நரிக்கண்டல் என்றொரு கண்டல் மரம் அழைக்கப்படு கிறது. இதை Aegieeras corniculatum என்றழைப்பர். Carapa obovata என்பதை கண்டலங்காய் என்றழைக் கின்றனர். இதற்குக் காய் பெரிதாக இருக்கும்.

கண்டல் என்ற பெயர் கடற்கரைச் சதுப்பு நிலச்சூழலில் பலமரங்களுக்கு வழங்கப்படினும் சங்கநூல்களில் கூறப்பட்ட

கண்டல் Rhizophora mucronata என்றுதான் கொள்ள வேண்டும், இதை வேலியாக வளர்த்திருக்கின்றனர். கண்டல் வேலி என்ற சொற்றொடர் பல பாடல்களில் வருகின்றது.

நற்றிணை 365ஆம் பாடலில் கூறப்பட்டுள்ள. கானல் கண்டல் கழன்றுகு பைங்காய்' கண்டலங்காய் என்றழைக்கப் படும் மரத்தின் காயாக இருக்கலாம்

கண்டல் என்பதற்குப் பிற்காலத்து உரையாசிரியர்கள் தாழை என்று பொருள் கூறினர். இது தவறு.

தேவாரத்தில் 'கண்டகங்காள் முண்டகங்காள் கைதைகாள் நெய்தல்காள்' என்று திருப்பழனப்பதிகத்தில் கூறப்பட்டதி லிருந்து தாழையான கைதை வேறு, கண்டல் வேறு என்பது தெரிகின்றது.

மேலும் திணைமாலை நூற்றைம்பதில் (16) கண்டல், தில்லை, தாழை தனித்தனியே கூறப்பட்டுள்ளன.

'பானல்வாய்த் தேன்விரிந்தன
கானல்வாய்க் கழிமணந்தன
ஞாழலொடு நறும்புன்னை
தாழையொடு முருகுயிர்ப்ப
வண்டல் வாய் நறுநெய்தல்
கண்டலொடு கடலடுத்துத்
தவளமுத்தம் சங்கீன்று'

யாப்பருங்கலவிருத்தி: 20, 90 மேற்கோள்
'கண்டலங் கைதையொடு விண்டன முண்டக' 46

யாப்பருங்கலவிருத்தியின் மேற்கோள் பாடலில் கடற் கரையில் காணப்படும் மரங்களும் செடிகளும் கூறப் பட்டுள்ளன.

நெய்தல், ஞாழல், புன்னை, தாழை, கண்டல் ஆகியவை இயற்கையில் கண்டறிந்து கூறப்பட்டுள்ளன. இதில் தாழையும் கண்டலும் வேறுவேறாகக்கூறப்பட்டுள்ளது கவனிக்கத் தக்கது.

மற்றும் 'கண்டலங்கைதை' என்று தெளிவாக மற்றொரு யாப்பருங்கலவிருத்தி மேற்கோளில் தாழையையும் கண்டலையும் தனித்தனியே கூறியிருப்பதால் கண்டல் தாழையன்று என்பது தெளிவாகும்.

ஆதலின் பிற்கால உரையாசிரியர்கள் கண்டலைத் தாழை என்று கூறியது தவறு என்பது தெளிவாகும்.

கண்டல் என்பது சங்க காலத்தில் கடற்கரைச் சதுப்பு நிலத்தில் காணப்பட்ட காடுகளில் (Mangrove forests) வளர்ந்த ஒரு சில தனித்தன்மை வாய்ந்த மரங்களைக் குறித்ததேயாகும்.

இந்த மரங்களுக்கு உப்புத் தண்ணீரிலும் அழிந்து விடாது வாழக்கூடிய தன்மையுண்டு. இந்தக் காடுகளில் கடல் நீர் வந்து வந்து பெயரும். இதையே,

> 'அழுவ நின்ற அவர் வேய் கண்டல், கழிபெயர்
> மருங்கில் ஓங்கி ஓதம் பெயர் தர
> பெயர் தந்தாங்கு'

என்று கண்டதைக் கண்டவாறே குறுந்தொகையில் (340) கூறப்பட்டுள்ளது.

இந்தக் கண்டற்காடுகளை அடுத்து, கடல்நீர் பாயாத கடற்கழியோரத்தில் தாழை, புன்னை, தில்லை முதலிய மரங்கள் காணப்படும்.

சங்கநூல்களில் கண்டல் என்ற பெயர் பொதுவாக ஒருசில தனித்த மரங்களுக்கே வழங்கினும் சிறப்பாக Rhizhophora mucronata என்ற மரத்திற்குத்தான் வழங்கப்பட்டுள்ளது.

# காஞ்சி

சங்கநூல்களில் காஞ்சி என்றொரு மரம் கூறப் பட்டுள்ளது.

'முடக்காஞ்சி செம்மருதின்
மடக்கண்ண மயிலாலப்'

பொருநராற்றுப்படை 189—190

'நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
கருங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி'

சிறுபாணாற்றுப்படை 178—179

'வெயில் நுழை யரியாக் குயினுழை பொதும்பர்
குறுங்காற் காஞ்சி நெடுங்கொடி
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ'

பெரும்பாணாற்றுப்படை 374—876

'காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்'

குறிஞ்சிப்பாட்டு 84

'புல்வரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
மெல்லவ விருந்த வூர்தொறு நல்லியாழ்'

மலைபடுகடாம் 449—450

'பயறுபோல் இணர பைந்தாது படிஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன் கொடுமை'

குறுந்தொகை 10

'உருகெழு தாமரை வான்முகை வெரூஉம்
கழனிய படப்பைக் காஞ்சி யூர'

குறுந்தொகை 127

'நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாணர் ஊரன் வாழ்க'

ஐங்குறுநூறு 1

'நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்
அவிரறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத்
தண்கயம் நண்ணிய பொழில்தொறுங் காஞ்சிப்
பைந்தா தணிந்த போதுமலி எக்கர்'

அகம் 25

'ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்டா தீர்ம்புறத் துறைப்ப'

அகம் 56

'கழனியம் படப்பை காஞ்சி யூர'

அகம் 96

'பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியினகத்து கரும்பருத்தி யாக்குந்'

அகம் 156

'மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழல் தமர்வளம் பாடி'

அகம் 286

'கோதை யிணர குறுங்காற் காஞ்சிப்
போதவிழ் நறுந்தாது அணிந்த கூந்தல்
அரிமதர் மழைக்கண் மாஅ யோளோடு'
அகம்.296

'மீனேற்றுக் கொடியோன்போன்
மிஞிறார்க்குங் காஞ்சியும்'
கலித்.26

'விரிகாஞ்சித்தாதுஆடி யிருங்குயில் விளிப்பவும்'
கலி.34

'கொய்குழை யகைகாஞ்சித் துறையணி
நல்லூர்'
கலி.74

'காஞ்சித்தா துக்கன்ன தாதுஎரு மன்றத்து
..............................
..............................
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி'
கலி.108

'மகிழ்நன் பரத்தமை பாடி யவிழ்இணர்
காஞ்சி நீழற் குரவை அயருந்'
அகம்.336

'குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்லிணர்ப்
பொற்றகை நுண்டாது உறைப்பத்
தொக்குடன்
'குப்பை வார்மணல் எக்கர்த் துஞ்சும்'
அகம்.341

'கள்ளார் உவகைக் கலிமகிழ் உழவர்
காஞ்சியங் குறுந்தறி குத்தி தீஞ்சுவை'
அகம். 346

'மணன்மலி பெருந்துறைத் ததைந்த
காஞ்சியொடு'
பதிற்றுப்பத்து23:19

'தீம்புனல் ஆய மாடும்
காஞ்சியம் பெருந்துறை மணலினும்பலவே'
பதிற்றுப்பத்து 48:17-18

'வளனுடைச் செறுவின் விளைந்தவை
யுதிர்த்த
களனறு குப்பை காஞ்சி சேர்த்தி'
பதிற்றுப். 62:14-15

'நீர்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப்
பூக்கதூஉ மினவாளை'
புறநானூறு 78

'பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
தேங்கொண் மருதின் பூஞ்சினை முனையிற்
காமரு காஞ்சி துஞ்சும்'
புறம்.351

காஞ்சி மரம் எப்பொழுதும் ஆற்றோரங்களிலும், நீர்நிலைப் பகுதிகளிலும் வாழும் தன்மையுடையது என்று அறிவியலார் கூறுவர். (Chiefly in wet places and along streams, rare elsewhere.)

அதேபோன்று சங்கநூல்களில் ஆற்றோரத் துறைகளிலும் பொய்கைக் கரையிலும், தண் கயத் துறையிலும் காஞ்சியைக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். 'காஞ்சியம் பெருந்துறை' என்று கூறப்பட்டுள்ளது.

நீர்த்தாழ்ந்த குறுங் காஞ்சிப் பூவை வாளைமீன் கவருவதாகவும் கூறப்பட்டுள்ளது.

இதன் அடி மரத்தைக் கருங்கால் காஞ்சி யென்றும் புல்லரை யென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

காஞ்சி மரத்தின் பூக்கள் கொத்து கொத்தாகத் தொங்கும். ஆண் பூவும் பெண் பூவும் தனித்தனியே தொங்கும். கொத்தில் (Drooping recemes) காணப்படும். இதன் பூங்கொத்தைக் கோதை என்று அழைத்துள்ளனர். இதன் பூ பயறு போல இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

காஞ்சியின் தாதைப் பற்றிக் குறிப்பிட்டுக் கூறியுள்ளனர். இதன் தாதை குயில் கோதியதென்றும், தாது வீழ்ந்த தாதெரு மன்றமும் கூறப்பட்டுள்ளது. இதன் இலையை மகளிர் கொய்து விளையாடுவர் என்று கலித்தொகை கூறியுள்ளது. பதிற்றுப்பத்து 'ததைந்தகாஞ்சி' என்று குறிப்பிட்டுள்ளது. இதற்கு விளக்கமாக,

> 'விளையாட்டு மகளிர் மலரும் தளிரும்
> முற்றியும் பூவும் கோடலாற்
> சிதைவு பட்டுக் கிடக்கின்ற காஞ்சி'

என்று கூறப்பட்டுள்ளது. மகளிர் காஞ்சிமரத்தின் போதவிழ் நறுந் தாதைக் கூந்தலில் அணிந்ததாக அகநானூறு கூறியுள்ளளது.

காஞ்சியின் கோதை இணர் போன்ற பூக்களையும் பசுமை நிறம் பொருந்திய தாதையும் சங்கநூல்கள் கூறியது உண்மையாகும். காஞ்சியை அறிவியலில் Trewia Nudiflora என்றழைப்பர்.

# குமிழ்

சங்கநூல்களில் குமிழ் என்றொரு செடி கூறப்பட்டுள்ளது.

'கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்'
சிறுபாணாற்றுப்படை 225-226

'செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலி
னின்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற் கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்'
பெரும்பாணாற்றுப்படை 179-181

'அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
தெளிமட மாற்கு வல்சியாகும்' நற்றிணை 6

'படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்
துழைமான் அம்பிணை தீண்டலின் இழைமகள்
பொன்செய் காசின் ஒண்பழம் தாஅம்
குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்'
நற்றிணை 274

'ஊசல் ஒண்குழைக் காசுவாய்த் தன்ன
அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி
கல்லென வரிக்கும் புல்லென் குன்றம்'
நற்றிணை 286

'புன்புலந் தழீஇய வங்குடி சீறூர்க்
குமிழ்உண் வெள்ளை பகுவாய் பெயர்த்த' புறம் 322

குமிழ்என் கிளவி மரப்பெய ராயின்
பீர்என் கிளவியோ டோரியிற் றாகும்'
தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-386

'கருமுகில் சுமந்து குறுமுயல் ஒழித்தாங்கு
இருகருங் கயலோடு இடைக்குமிழ் எழுதி'
சிலப்பதிகாரம் 5. 204-205

'புயலோ குழலோ கயலோ கண்ணோ
குமிழோ மூக்கோ விதழோ கவிரோ'
மணிமேகலை 6:122-123

'கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன
குமிழ்மூக் கிவை காணுமிழ் சீயொழுக்குப'
மணிமேகலை 10.17-18

குமிழம் ஒரு குறு மரமாகும். குமிழின் பூவை மகளிரின் மூக்கிற்கு ஒப்பிட்டுச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கூறியுள்ளன.

குமிழ மரம் இலையுதிர் காடுகளில் பெரும்பாலும் காணப்படும். இதன் பூவை, பொன்னால் செய்த உருண்டைக் காசிற்கும் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

சங்ககாலத்துக் காசுகள் உருண்டையாக இருந்ததால் இவ்வாறு உவமிக்கப்பட்டது. மகளிரின் காதுகளில் அணியும் ஊசல் ஒண்குழையில் இருந்த காசு போல இருந்ததாக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

குமிழ மரத்தின் பழ நிறத்தினைப் போல் துவரூட்டின யாழின் போர்வையைப் பற்றிச் சிறுபாணாற்றுப் படை கூறியுள்ளது. இதன் பழம் மஞ்சளாக இருக்கும். மானும் ஆடும் குமிழ மரத்தில் மேய்வதாகவும் கூறப்பட்டுள்ளது.

குமிழ் என்னும் சொல் மரப் பெயராயின் பீர் எனும் சொல் போலப்புணரும் என்று தொல்காப்பியம் கூறியுள்ளது.

குமிழ் என்ற சங்ககாலப் பெயர் இன்றும் தமிழில் குமிழம், குமிழ் என்று வழங்குகின்றது. மலையாளத்திலும் கன்னடத்திலும் இதே பெயர் வழங்குகின்றது.

குமிழை அறிவியலில் Gmelina artorea என்று அழைப்பர்.

# குருந்து

சங்கநூல்களில் குருந்து என்றொரு மரம் கூறப்பட்டுள்ளது.

'நன்னாட் பூத்த நாகுஇள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து'
அகம் 85

'இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி
கொல்புனக் குறுந்தொடு கல்லறைத் தாஅம்'
அகம் 133

'கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த
வல்இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து'
அகம் 194

'வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு
அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல்
வதிய'
அகம் 304

'குருந்தவிழ் குறுப்பொறை பயிற்றப்
பெருங்கலி மூதூர் மரந்தோன் றும்மே'

*நற்றிணை 321*

'திருந்திழாய் காதலர் தீர்குவ ரல்லர்
குருந்தின் குவியிணர் உள்ளுறை யாகத்'

*கார்நாற்பது 15*

'காசின் அன்ன போதீன் கொன்றை
குருந்தோ டலம்வரும் பெருந்தண் காலையும்'

*குறுந்தொகை 148*

'அடலருந் துப்பின்.........
............ குருந்தே முல்லையென்
றிந்தான் கல்லது பூவுமில்லை'

*புறம் 335*

'புல்லிலை வெட்சியும் பிடவும் தளவும்
முல்லையும் குருந்துங் கோடலும் பாங்கரும்'

*கலி 103*

'முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை'

*கலி 113*

'நரந்த நாக நள்ளிருள் நாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்'

*குறிஞ்சிப்பாட்டு 94-95*

'கொல்லப் புனத்துக் குருந்தொசித்தாற்
பாடுதும் முல்லைத் தீம்பாணியென்றான்'

*சிலம்பு. 47-17*

'குருந்துந் தளவுந் திருந்து வேர்செருந்தியும்'

*மணிமேகலை 93-99*

குருந்து என்ற பெயர் இன்றும் சிற்றூர்களில் வழங்குவதால் குருந்தமரம் எதுவென்பதைக் கண்டுபிடிக்க முடிகின்றது.

குருந்த மரத்தை பெரும்பாலும் முல்லைத் திணையிலேயே கூறியுள்ளனர். இதன் பூவை இடையர் கண்ணியாகக் கட்டி அணிந்து கொள்வர். என்று கூறப்பட்டுள்ளது.

மாயவன் குருந்தை ஒசித்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இந்த நிகழ்ச்சி வடநூற்களில் கூறப்படவில்லை.

குருந்த மரத்தை அறிவியலில் Atlantis missionis என்றழைப்பர்.

# சந்தன மரம்

சந்தனமரம் சங்க நூல்களில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. 'சிறியிலை சாத்தம்' என்று நற்றிணை கூறியுள்ளது. மற்ற மரங்களின் இலைகளை ஒப்பிட்டுப் பார்க்கும் போது சந்தன மரத்தின் இலைகள் சிறியவைதாம்.

சிறிய கோலையுடைய பூங்கொத்தை உடையதென்று நற்றிணை கூறியுள்ளது.

' மரல்நார் உடுக்கை மலையுறை குறவர்
அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற்று ஆர முருக்கிப், பையென
மரம்வறி தாகச் சோர்ந்துஉக் காங்குஎன்' —நற். 64

' கொண்டல் மாமழை குடக்குஏர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்' — நற். 140

'பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு' —நற். 250

'யாங்குணர்ந் துய்குவள் கொல்என மடுத்த
சாந்த நெகிழி காட்டி
ஈங்கா யினவால் என்றுசின் யானே'

'களிறுஅகப் படுத்த பெருஞ்சின மாசுணம்
வெளிறுஇல் காழ்மரம் பிணித்து நனிமிளிர்க்கும்
சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை' நற்.261

'இடைச்சுரத்து எழிலி உரைத்தென மார்பின்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு' நற் 394

'அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல்செல் லாது
நறு வீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்' அகம்.2

'சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும்
குன்ற நாடன் அன்பிலை ஆகுதல்' அகம்.172

'தண்நறுஞ் சாந்தம் கமழும் தோள்மணந்து'-அகம். 186

'நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
சாந்த மென்சினை தீண்டி, மேலது' அகம்.242

'சாந்தம் புதைத்த ஏந்துதுளங்கு எழிலிஇமில்-' அகம்.249

'புகழ்குறி கொண்ட பொலந்தார் அகலத்துத்
தண்கமழ் சாந்தம் நுண்டுகள் அணிய' அகம்.354

'நெல்லும்நீரும் எல்லார்க்கும் எளியவென
வரைய சாந்தமுந் திரைய முத்தமும்
இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்.' புறம்.58

'சாந்த விறகின்உவித்த புன்கம்
கூதளம் கவினிய குளவி முன்றில்
'நறைநார்த் தொடுத்த வேங்கைஅம் கண்ணி
புறம். 168

'விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்'
—புறம். 374

தென்பவ் வத்து முத்துப் பூண்டு
வடகுன் றத்துச் சாந்தம் உரீஇ' புறம். 380

'வடவர் தந்த வான்கேழ் வட்டம்
குடபுல உறுப்பின் கூட்டுப்பு நிகழ்த்திய
வண்டு இமிர் நறுஞ்சாந்து அணிகுவம்' அகம். 340

'சாந்தம் நாறும் நறியோள்
கூந்தல் நாறும் நின் மார்பே—தெய்யோ'
— ஐங்குறுநூறு 240

'குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேம்கமழ் சிலம்பின் வரையகம் கமழும்'
ஐங்குறுநூறு 253

'பாவை அன்ன மகளிர் நாப்பண்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு'
பதிற்றுப்பத்து 88:29 30

'பலஉறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்குஅவை தாம்
என் செய்யும்' — கலி. 9

'வண்டுஊது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப' கலி. 93

'தாகும் ததர்பட்ட சாந்தமும் சேரி
அரிமதர் உண்கண்ணார் ஆராக் கவவின்' கலி. 91

'சிறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்'
—பரிபாடல் 8:96—97

'அகில்கெழு சாந்தம் மாற்றி ஆற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்'
—பரிபாடல் 12:13—14

'தேம்படு மலர்,குழை, பூந்துகில், வடிமணி,
ஏந்துஇலை சுமந்து; சாந்தம் விரைஇ'
—பரிபாடல் 17:1-2

'வண்டுஆர் பிறங்கல் மைந்தர் நீவிய
தண்கமழ் சாந்தம் தைஇய வளியும்'
பரிபாடல் 21 : 46-47

'தானைத் தலைத்தலை வந்து மைந்துற்றுப்
பொறிவி யாற்றுறி துவர்,புகை, சாந்தம்'
பரிபாடல் 22: 16–17

'நறைபடர் சாந்த மறவெறிந்து நாளால்
உறையெதிர்ந்து வித்தியவூழ் ஏனற்—பிறையெதிர்ந்த'
திணைமாலை நூற்றைம்பது 1

'சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச்
சாந்த மெறிந்த விதண்மிசைச் — சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னாள்
இமிழக் கிளியெழா வார்த்து.'
திணைமாலை நூற்றைம்பது 3

'வேறுபல் துகிலின் நுடங்கி அகில் சுமந்து
ஆரம் முழுமுதல் உருட்டி'
திருமுருகாற்றுப்படை 296-297

'நறையு நரந்தமும் அகிலும் ஆரமுந்
துறைதுறை தோறும் பொறை யுயிர்த்தொழுகி'
பொருநராற்றுப்படை 238-239

'நறுவீ நாகமும் அகிலும் ஆரமுந்
துறையாடு மகளிர்க்குத் தோள்புணை யாகிய'
சிறுபாணாற்றுப்படை 116-117

'இருந்துதுயி லெடுப்ப வினிதின் எழுந்து
நெடுங்காழ் ஆரங் கவைஇய மார்பின்'
மதுரைக்காஞ்சி 715-729

'ஆரந் தாங்கிய அலர்முலை ஆகத்துப்
பின்அமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து'
நெடுநல்வாடை 136-137

'பாரம் பீரம் பைங்குருங் கத்தி
ஆரங் காழ் யாரங் காழ்வை கடியிரும் புன்னை'
குறிஞ்சிப்பாட்டு 92-93

'வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தண்கடல் முத்தும் குணகடல் துகிரும்'
—பட்டினப்பாலை 186,187-189

'வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்
நாகந் திலக நறுங்காழ் ஆரத்' -மலைபடுகடாம் 519-526

'குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரம் சுற்றுவன அகைப்பப்' —நற். 5

'ஆரங் கமழும் மார்பினை
சாரல் சிறுகுடி ஈங்குநீ வரலே' —நற். 168

'பெருவரை அடுக்கத்து அருவி ஆடிச்
சாரல் ஆரம் வண்டுபட நீவிப்' —நற். 259

'நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலம்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்' —நற். 292

'மாரிப் பீத்திகத்து ஈர்இதழ் அலரி
நறுங்காழ் ஆரமொடு மிடைந்த மார்பில்' —நற்.314

'ஆரம் நீவிய அணிகிளர் ஆகம்
சாரல் நீள்இடைச் சாலவண்டு ஆர்ப்ப' —நற். 344

'ஆர நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே' குறுந்.161

'எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்
தார நாறு மார்பினை' குறுந். 286

'மலைச்செஞ் சாந்தின் ஆர மார்பினன்' குறுந். 321

'ஆர நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கட் கொடிச்சி' குறுந். 286

'மன்னுயிர் அறியாத் துன்னரும்பொதியிற்
சூருடை யடுக்கத் தாரங் கடுப்ப' குறுந். 376

'ஆர மார்பின் அறிஞிமிறு ஆர்ப்பத்
தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன்' அகம்.102

'குன்றக் குறவ னாரம் அறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்' ஐங்குறு. 254

'தெறல்அரும் மரபின் கடவிட் பேணிக்
குறவர் தந்த சந்தின் ஆரமும்
இருபேர் ஆரமும் எழில்பெற அணியும்' அகம். 13

'ஆரம் நாற, அருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடி' அகம் 24

'அரையுற்று அமைந்த ஆரம் நீவிப்
புரையப் பூண்ட கோதை மார்பினை' அகம். 100

'கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊரல் இருங்கதுப்
பைதுவரல் அசைவளி யாற்றக் கைபெயரா' —அகம்.

'ஆரந் தாங்கிய அலர்முலை ஆகத்து' அகம். 206

'பிரசப் பல்கிளை ஆர்ப்பக் கல்லென
விரைஇழி அருவி ஆரம் தீண்டித்
தண்என நனைக்கும் நளிர்மலைச் சிலம்பில்' அகம். 228

'நறுவ்ரை ஆரம் அற அறவெறிந்து உழுத
உளைக்குரல் சிறுதினை கவர்தலின் கிளைஅமல்
அகம். 388

'குறத்தி மாட்டிய வறல்கடைக் கொள்ளி
ஆரம் ஆதலின் அம்புகை அயலது' புறம். 108

'ஆர நெருப்பின் ஆரல் நாறத்' - புறம். 320

'ஆர நாறும் அறல்போற் கூந்தல்' - குறுந். 286

'மலைச்செஞ் சாந்தின் ஆர மார்பினன்' - குறுந். 321

'மன்னுயி ரறியாத் துன்னரும் பொதியிற்
சூருடை யடுக்கத் தாரங் கடுப்ப' - குறுந் 376

'ஊழ்ஆரத்து அம்புகை சுற்றிய தார்மார்பிற்
சாழ் ஆரத்து அம்புகை சுற்றிய தார்மார்பின்'
- பரிபாடல் 9, 27 - 28
(பாடபேதம்)

'பைந்தளிர் ஆரமொடு பல்பூங் குறுமுறி
செந்தளிர் மேனி சேரா தொழியவும்
மலையத் தோங்கி மதுரையின் வளர்ந்து
புலவர் நாவிற் பொருந்திய தென்றலொடு'
சிலப். 13:23 - 26

'ஆங்கது அன்றியும் ஓங்கிரும் பரப்பின்
வங்க வீட்டத்துத் தொண்டியோர் இட்ட
அகிலுந் துகிலும் ஆரமும் வாசமும்
தொகுகருப் பூரமுஞ் சுமந்துடன் வந்த'
- சிலம்:14: 107 - 109

'கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு
தெக்கண மலையகச் செழுஞ் சேறாடிப்

சிலப் 14,80 : 81

சந்தனம், விடர்முகை அடுக்கத்திலும் வரையகத்திலும் மலையிலே வளர்ந்ததும் கூறப்பட்டுள்ளது.

மலையில் உறையும் குறவர், சந்தனத்தின் சிறப்பை உணராது அதனை அறுத்ததனால், மரம் வறிதானதாகக் கூறப்பட்டுள்ளது.

சந்தனம் சிறந்த நறுமணத்தைத் தரும் என்று மக்கள் தெரிந்திருந்தனர். சந்தனத்தை நறும் நாற்றத்திற்காகப் பூசிக் கொள்வதைப் பற்றிச் சங்க நூற் பாடல்கள் பல கூறியுள்ளன.

மாந்தர் மார்பில் சந்தனம் பூசிக்கொள்வது வழக்கமாக இருந்தது. சாந்த நறும்புகையை நுகர்ந்து மகிழ்ந்தனர். மகளிர் தங்கள் கூந்தலிற்குச் சந்தன நறும் புகையையும் பூச்சையும் நறுமணத்திற்காக ஊட்டினர்.

விரைய (மணச்) சாந்தத்தையும் திரைய முத்தத்தையும் பாண்டியன் உடையவனாக இருந்தான் என்று புறநானூறு (58) கூறியுள்ளது. குன்ற புகைத்த சந்தனமரம் சிலம்பு (மலை) முழுவதும் கமழ்ந்தது என்று கூறப்பட்டுள்ளது. பரத்தையரும் சந்தனத்தைப் பூசிமகிழ்ந்தனர் எனக் கூறப் பட்டுள்ளது. விழாக் காலங்களில் சாந்தப் புகையும் மேலே எழும்பியது எனச் சொல்லப்பட்டுள்ளது. சந்தனத்தை எறிந்து சந்தனத்தால் கட்டப்பட்ட பரணில் இருந்து சந்தனம் கமழ, கிளி கடியும் தலைவியைப்பற்றிக் கூறியுள்ளதையும் காணலாம்.

மேகந்தோய் சாந்தத்தோடு காழகில் நாக மாகியவற்றைப் புகைத்ததைப் பற்றித், திணைமொழி ஐம்பதுபாடல் கூறியுள்ளது.

சங்க காலத்தில் தமிழ்நாட்டில், முக்கியமாகப் பாண்டிய நாட்டில் சந்தனம் மிகுந்திருந்தது. சங்காலத்தில் சந்தனம் எவ்வளவு நிறைய இருந்ததென்றால், சந்தன மரத்தை விறகாகவும் பயன்படுத்தினர். அகநானூறு (172)புறநானூறு (168)- இச் செய்தி கூறப்பட்டுள்ளது. சாந்த விறகு என்று புறநானூறு கூறியுள்ளது. சந்தனத்திலிருந்து சாந்து என்ற மணப்பூச்சுப் பரவலாகப் பயன்படுத்தினர் என்பதைச் சங்க காலத்துப் பாடல்கள் கூறியுள்ளன.

பல நூல்களும் சாந்து என்ற சந்தனக் கலவையைப் பரவலாகக் கூறியுள்ளன. இதிலிருந்து சங்ககாலத்தில் சந்தனம் பரவலாகப் பயன்படுத்தப்பட்டது என்று தெரிகின்றது.

சந்தனம் என்ற மரம், சாந்தம் என்று அழைக்கப்படுகின்றது. சந்து என்ற பெயரும் சந்தனத்தைக் குறித்தது. சந்தனத்திற்கு மற்றொரு பெயராக ஆரம் என்ற சொல்லும் வழங்கியுள்ளது.

'சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை'

(அகம். 59)

என்று வரும் அகப்பாடலில் சந்தனம் 'சந்து' என்றே அழைக்கப்பட்டுள்ளது. திருப்பரங்குன்றத்தில் சங்ககாலத்தில் சந்தன மரங்கள் நிறைய இருந்தன. இப்போது அக்குன்றம் மரங்களின்றி வரண்டு போயுள்ளது. இன்னொரு அகநானூற்றுப் பாடலில் (23) 'குறவர் தந்த சந்தின் ஆரம்' கூறப்பட்டுள்ளது. இங்கு சந்து சந்தனத்தைக் குறிப்பிட்டுள்ளது.

'தண்நறுஞ் சிலம்பின் துஞ்சுஞ்
சிறியிலைச் சந்தின் வாடுபெருங்க காட்டே'

என நற்றிணைப்பாட்டு [7] ம் சிறிய இலையையுடைய சந்தினை, அதாவது சந்தன மரத்தைப்பற்றிக் கூறியுள்ளது. அகநானூற்றில் 102 ஆம் பாடலில் சந்தின் ஊரல் என்பது பற்றிக் கூறப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில் 'சந்தின் குப்பையையும்' காழ் நீர் முத்தையும் பாண்டியன் திறை தந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சந்தின் குப்பை பலவகைச் சந்தனமாக இருக்கலாம்.

சாந்து என்று சந்தன மரத்தை 'சாந்து வரு வானிநீரினும்' என்ற வரியில் (^7: 112) சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது. மணிமேகலையும் சந்தனத்தைச் சாந்து (27. 100) என்று அழைத்துள்ளது. சந்தனத்தில் இருந்து இழைக்கப்படும் சாந்தை ஐந்திணை ஐம்பது சந்தனச் சாந்து (:4-3) என்று கூறியுள்ளது.

சங்க நூலில் சாந்தம் என்ற பெயர் சந்தன மரத்தின் பெயராகப் பரவலாக வழங்கப்பட்டுள்ளது. இழைத்த சந்தனத்தைச் சாந்து என்று குறிப்பிட்டுள்ளதைக் காண லாம்.

சந்தனம் என்ற பெயர், சங்கநூல்களில் வழங்கவில்லை. 'சாந்தம்', சந்து, ஆரம் என்பவையே வழங்கின.

பரிபாடலிலும் (21 - 25) சிலப்பதிகாரத்திலும் (4-38) நாலடியாரிலும் (180) (234), முத்தொள்ளாயிரத்திலும் (22) சந்தனம் என்ற பெயர் வந்துள்ளது.

சந்தன மரத்தைப் பற்றிக் கூறியுள்ள ஓர் அறிவியல் செய்தி கவனிக்கத் தக்கது.

'குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரஞ் சுற்றுவன அகைப்ப'

இந்த நற்றிணை (5) வரிகளுக்கு உரையாசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் அரிய நுண்ணிய விளக்கத்தைத் தந்துள்ளனர்.

'ஏனைய மரங்கொடிகளிவற்றின் வேர், சந்தன வேரொடு முயங்காத வழி, தனித்துள மரம் நறுமண மெய் தாதது கண்கூடாகக் காண்டலால் ஈண்டு, நறைக்கொடி சுற்றுவது கூறி, நறுங்காழாரம் என்றார்' என்று உரைவிளக் கம் கூறியுள்ளார்.

இந்தியாவிலேயே வேர்ப் புல்லுருவி (Root parasite) சந்தனமரம்தான். இதை (Semi root parasite) என்பர்.

வேறு மரங்களின் செடிகளின் வேர்களோடு சந்தன மரத்தின் வேர் ஒட்டிக்கொண்டு, உணவுச் சத்து மிகுநத சாற்றை உறிஞ்சி நன்கு வளர்ந்து வைரம் பாய்கிறது. தனித்த மரம் அவ்வாறு வைரம் பாயாது. சந்தனமரத் திற்கு அதன் வைரமே நறுமணத்தைத் தருகிறது.

'பரிபாடலில் காழாரம் தம் புகை சுற்றிய தார்மார்பின்' என்று கூறப்பட்டுள்ளது. காழாரம் என்பதற்கு வயிர்த்த சந்தனம் என்று இங்குப் பொருள் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். மற்றொரு செய்தி இந்த சந்தன மரத்தை நறைக் கொடியுடன் தொடர்புபடுத்திக் கூறுவ தாகும்.

'நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
சாந்து மென்சினை தீண்டி, மேலது'

அகம். 242

'நறைபடர் சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்திய வூழேனற் - பிறையெதிர்ந்த'
'சாந்த விறகின் அவிந்த புனகம் - திணைமாலை. 105

நறைக் கொடியுடன் சந்தனத்தைச் சேர்த்து மேலும் மூன்று பாடல்களில் கூறியிருப்பதைக் காணுங்கால், சந்தனம் இயற்கைச் சூழ்நிலையில் நறைக்கொடியிலிருந்தே வேர்மூல மாகச் சத்தை உறிஞ்சியுள்ளது தெரிகின்றது. இதை அறிவியலார் ஆராய வேண்டும்.

நறைக் கொடியை (Lavunga Scandens) என்றழைப்பர் நறிய மணத்தையுடைய காயையுடைய கொடியாகும்.

நற்றிணையில் ஒரு பாட்டில் பெருஞ்சின மாசுணம் வெளிறில் காழ்மரத்தைப் பிணித்து, நனிமிளிர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சந்தன மரத்தின் குளிர்ச்சிக்காகப் பாம்புகள் அந்த மரத்தை அண்டும் என்றொரு நம்பிக்கை இந்தியாவில் இருந்தது. இரகு வம்சத்திலும், இதோப தேசத்திலும் சந்தன மரத்தில் பாம்பு இருந்ததாகக் கூறப் பட்டுள்ளது. காளிதாசனும் தமிழ் நாட்டிலிருந்து மலைய மலையில் சந்தன மரத்தில் கரும்பாம்பு இருந்ததாக சாகுந்தலத்தில் கூறியுள்ளான்.

மற்றும் கி. பி. 645 ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு வந்த யுவான் சுவாங் என்ற சீனப் பயணி, சந்தனமரம் குளிர்ச்சி உடையது என்றும் அந்த மரத்தில் பல வகைப் பாம்புகள் இருந்தன என்றும் கூறியுள்ளார்.

சங்ககாலத்தை யொட்டி வாழ்ந்த கிரேக்க ஆசிரியர் பிளினி, கி. பி. முதலாம் நூற்றாண்டில்— இந்தியாவில் சந்தன மரத்தில் சிறிய பாம்புகள் வாழ்ந்ததாகவும் அவை கடித்தால் உடனே சாவு ஏற்படும் என்றும் கூறியுள்ளார்.

இந்த நம்பிக்கையெல்லாம் சங்க காலத்திலே இருந்து தோன்றியிருக்க வேண்டும் என்பதை மேலே காட்டிய நற்றிணைப் பாட்டு கூறியுள்ள செய்தியிலிருந்து தெரி கின்றது.

சந்தனத்தைப் பற்றி வடமொழி நூல்களில் கூறப்பட்டுள்ளது. வட மொழி நூல்களில சந்தனத்தைப் பற்றிய குறிப்புகள் கி.மு. 100 ஆம் ஆண்டிலிருந்து கி. பி. 1550 ஆண்டு வரைக்கும் வருகின்றன.

சந்தன மரத்தைக் குறிப்பிடும்போது அர்த்தசாஸ்திரம் 15 வகையான சந்தன மரங்களைப் பற்றிக் கூறியுள்ளது. ஆனால், அவைகளில் சொல்லப்பட்ட பெரும்பாலான செய்திகள் புராணச் செய்திகளாக இருக்கின்றன. அதில் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள அரி சந்தனமும் மலையகச் சந்தனமும் கூறப்பட்டுள்ளன.

வடமொழி நூல்களில், (சந்தன வகைகளில் தென்னாட்டில், மலையமலையில் விளையும் சந்தனமே, மிகவும் சிறப்பானதாகச் சொல்லப்பட்டுள்ளது. மலைய மலை பொதியில் மலையாகும்.

மன்னுயிரறியாத் துன்னரும் பொதியிற், சூருடையடுக்கத் தாரங் கடுப்ப' என்ற குறுந்தொகைப் பாட்டுவரியில் பொதிகை மலைச் சந்தனத்தைச் சிறப்பித்துக் கூறியுள்ளதைக் காணலாம். பொதியிற் சந்தனம் சிறப்புடைத்தாகலின் அதனைக் கூறினார் என்று உரையெழுதி இருப்பதைக் கவனிக்க வேண்டும்.

சிலப்பதிகாரம், 'தொக்கென மலையகச் செழுஞ்சேறாடி' என்று கூறியுள்ளது மலையச் செழுஞ் சேறையே மலையஜம் என்று வடமொழியில் சிறந்த சந்தனமாகக் கூறினர். தென்னாட்டில் சிறப்புடையனவாக முத்தும் சந்தனமும் கூறப்பட்டுள்ளன.

சங்கநூல்களில் இரு பாடல்களில் வடநாட்டுச் சந்தனம் கூறப்பட்டுள்ளது.

வடகுன்றத்துச் சாந்தம் (புறம். 380),
வடவர் தந்த வான்கேழ் சந்தம் (அகம். 340)

ஆகிய பாடல்களில் வடநாட்டில் அருகிக் காணப் பட்ட சந்தனத்தைக் கூறியுள்ளனர்.

சிலப்பதிகாரத்தில் வங்கவீட்டத்துத் தொண்டியோர்க் குத் திறை இட்டவைகளில் ஆரம் கூறப்பட்டுள்ளது. இதற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் ஆறு வகை சந்தனத் தைக் கூறியுள்ளார். ஆரத்தில் மலையாரம், தீமுரன் பச்சை, கிழான்பச்சை, பச்சைவெட்டை, அரிசந்தனம், வேரச்சகி கொடி என்ற வகைகளைக் கூறியுள்ளார்.

இதில் மலையாரம் என்றது பொதியமலையில் விளைந்த சந்தனமாகும்.

தீமுரன்பச்சை என்பது திமோர் (Timor) நாட்டி லிருந்து இறக்குமதியான சந்தனமாகும். தீமுரன் பச்சை என்னும் இடைக்காலத்தில் வந்த திமோர் நாட்டின் சந்தனம் உயர்ந்தது, சிறந்தது என்று கருதப்பட்டது.

கி. பி. 1500 ஆம் ஆண்டில் இந்தியா வந்த பயணியான பர்போசா (Barbosa) சந்தனம் திமோரில்தான் (Timor) விளை கின்றது, வேறெங்கும் விளைவதில்லை என்று கூறியுள்ளான். ஆனால் பர்போசாவுக்கு முன்பு அடியார்க்கு நல்லார் தீமுரன் பச்சை என்று கூறி, திமோர் நாட்டிலிருந்து இறக்குமதியான சந்தனத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

கிழான் பச்சை என்பது மலேயா நாட்டில் கிள்ளான் என்ற ஊரிலிருந்து இறக்குமதியானதாகத் தெரிகின்றது.

ராஜநிகண்ட எழுதியவரான அரகிரி(Harahiri) வெட்டே, சுக்வாடி என்ற சந்தன வகைகளைக் கூறியுள்ளார். மேலும் அவர், வெட்டெ சந்தனம் மலைய நாட்டில் வெட்டெ என்ற இடத்தில் இருந்து வந்ததாகக் கூறியுள்ளார். இந்த ஆசிரியரின் காலம் கி. பி. 1500 ஆண்டாகும். அடியார்க்கு நல்லார் கூறிய பச்சைவெட்டை, வெட்டெ என்ற இடத்தில் இருந்து வந்த சந்தனமாகக் கருதலாம்.

இந்த வெட்டை என்ற சந்தனமானது மலேய நாட்டில் வெட்டெ வெட்டை என்ற இடத்திலிருந்து வந்து இறக்குமதியான சந்தனமாகவும் இருக்கலாம். இவை தொண்டையர்க்குத் திறையாகக் கிடைத்ததாகக் கூறப்பட்டிருப்பதால், வெளிநாட்டிலிருந்து வந்த சந்தனமாகக் கருதவே இடமுண்டு.

சாளுக்கிய அரசனான சோமேஸ்வரன் எழுதிய மானசல்லோசத்தில் சந்தன மரத்தின் வேர் சிறந்த சந்தனத்தைத் தருவதாகக் கூறப்பட்டுள்ளது. இதை 'சந்தன மூல' என்று அழைப்பர். அடியார்க்கு நல்லார் கூறிய* வேரச்சக்கோடி இது வேயாகலாம்.

அரி சந்தனம் என்று ஒருவகை கூறப்பட்டுள்ளது. இது மஞ்சள் நிறமானதாகும். இது தமிழ்நாட்டில் விளைந்த ஒரு வகை சந்தனமாகும்.

வடமொழி நூல்களில் மலையஜம் என்ற மலையமலைச் சந்தனம் வெண்மை நிறமானது என்று பல இடங்களில் கூறப்பட்டுள்ளது.

வடமொழி நூல்களில், சிலவகைச் சந்தனம் கிளியின் நிறம் போன்று பச்சை நிறமாக இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

அடியார்க்கு நல்லார் கூறிய தீமுரன் பச்சை, கிழான் பச்சை, பச்சை வெட்டை என்ற பெயர்களில் பச்சை கூறப்பட்டு இறப்பதைக் காணலாம்.

ஆனால், பச்சை நிறத்தில் சந்தனம் இருந்ததாகக் கூறப்படுவது அவ்வளவு பொருத்தமாகத் தெரியவில்லை. பச்சைக் கருப்பூரம் என்ற வழக்கில் வணிகப் பெயராக பச்சை வருவது போல, பச்சை என்பதும் வணிகப் பெயராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

'சந்தன மரம் நம் நாட்டிற்குரியது அன்று' என்று செடி நூல் அறிஞர்கள் கண்டு பிடித்துள்ளனர். இந்தமரம் கி. மு.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு தீமோர் நாட்டிலிருந்தும் மலேய நாட்டிலிருந்தும் இந்தியாவுக்குக் கொண்டு வந்ததாகக் கூறியுள்ளார்கள். இதற்கான காரணங்களைக் கூறியுள்ளார். இவ்வாறு கொள்வதற்கு அறிவியலில் சான்றுகள் உள்ளன.

இவ்வாறு கொண்டுவரப்பட்ட சந்தனம் முதலில் தமிழகத்தில் கொண்டுவரப் பட்டிருக்க வேண்டும் என்று தெரிகின்றது. பொதியமலையில் சந்தனம் விளைந்ததாகத் தெரிகின்றது.

சந்தனத்தின் காரணப் பெயரான சாந்தம் என்ற சங்க காலப் பெயர் சாந்து என்ற சொல்லிலிருந்து வந்துள்ளது. இடுகுறிப் பெயராக இன்றிக் காரணப் பெயராக வழங்கினதால், வெளி நாட்டிலிருந்து வந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

சாந்து என்பது ஏதேனும் ஒரு பொருளை அரைத்து எடுத்துப் பயன் படுத்தும் பொதுவான ஒருவகைப் பூச்சாகும். சிறப்பான சந்தனத்தை அரைத்துச் சாந்து செய்ததால் சாந்து என்ற பெயர் வந்தது.

சாந்தம் என்ற பெயர் சந்தனத்திற்குச் சிறப்பாக வழங்கியது. இந்தச் சந்தனம் என்ற பெயரானது பிற்காலத்தில் வட நூல்களில் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆங்கிலம், இலத்தின் மொழியில் தமிழ்ப்பெயரே வழங்கி வருகின்றது.

சந்தனத்தை அறிவியலில் (Santalum Album) என்பர். ஆங்கிலத்தில் (Sandle wood tree) என்று கூறுவர்.

கருவி நூல்கள்

1. Manual of Indian Forest Botany-N. L. Bor. Oxford University Press.

2. Studies in Indian Cultural History Volume 1 by P. K. Gode M. A. D. Litt. (h. c. Paris) 1961 Edition
Published by Vishevesh raranand Vedic Institute Hoshiarpur.

# செயலை

'புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி
ஒலிக்குழை செயலை உடைமான் அல்குல்'

*அகம். 7*

'வந்தன னாயின் அந்தளிர்ச் செயலைத்
தாழ்வில் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயி
றூசல் மாறிய மருங்கும் பாம்புடன்'

*அகம். 38*

'கேட்டியோ வாழிவேண் டன்னை நம்படப்பை
ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை
ஓல்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென
முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே'

*அகம். 68*

'அழலே செயலை அந்தழை அசைஇயும்
குறமகள் காக்கும் ஏனல்'

*அகம். 188*

'வயலையஞ் சிலம்பின் றலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னய்'

*ஐங்குறுநூறு 211*

அத்தச் செயலை துப்புறழ் ஒண்டளிர்
புன்றலை மந்தி வன்பற ழாரும்

*ஐங்குறுநூறு 273*

செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்

*திருமுருகாற்றுப்படை-206-7*

எரியவிர் உருவீ ணங்குழைச் செயலைத்
தாதுபடு தண்ணிழல் இருந்தன மாக

*குறிஞ்சிப்பாட்டு 105-106*

'சேத்த செயலைச் செப்பம் போகி
யலங்குகழை நரலு மாரிப் படுகர்

*மலைபடுகடாம் 160-161*

அஞ்சி லோதி யசையியற் கொடிச்சி
திருந்திழை யல்குற்கு பெருந்தழை யுதவிச்
செயலை முழுமுதல் ஒழிய வயல

*குறுந்தொகை 214*

மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
செயலை அந்தளிர் அன்னஎன்
மதனின் மாமைப் பசலையுங் கண்டே

*நற்றிணை 244*

இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்
சுற்றமை வில்லன் செயலைத் தோன்றும்
நற்றார் மார்பற் காண்குறின் சிறிய

*நற்றிணை 376*

சுனையெலா நீல மலரச் சுனைசூழ்
சினை எலாஞ் செயலை மலரக் காய்கனி
உறழ நனைவேங்கை ஒள்ளிண மலர

*பரிபாடல் 16-30-32*

செயலையந் தளிரேய்க்கும் எழில்நல மந்நலம்
பசலையா லுணப்படுப் பண்டைநீர் ஒழிந்தக்
கால்

*கலித்தொகை - 15*

மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த

*மணிமேகலை 24: 28 - 29*

செயலை என்ற மரம் அசோக மரமென்று உரையாசிரி யர்கள் அனைவரும் பொருள் கூறியுள்ளனர். ஆனால் செயலை என்று மரத்தின் பெயர் கூறியதல்லாது கொழுங் கா லசோகமும் என்று மலர்வனம் புக்க காதையில் பல மரங்களுடன் மணிமேகலை கூறியுள்ளது. அதுபோன்றே கலித்தொகை 57ஆம் பாட்டில் செயலை என்று கூறாமல் அசோகம் என்றே கூறியுள்ளது.

'பொழி பெயல் வண்மைலான சோகந்தன் காவினுள்
கழிகலி னிளமாவின் நளிரன்னாய தண்றலை'

என்ற வரியில் அசோகின் காவைப் பற்றிக் கூறியுள்ளது.

சிலப்பதிகாரத்தில் செயலை என்ற பெயர் கூறப்பட வில்லை. ஆனால் வேனிற்காதை வெண்பாவில், 'செந்தாமரை விரியத் தேமாங் கொழுந்தொடு மைந்தா ரசோக மடலவிழ' இளவேனில் வந்ததாகக் கூறப் பட்டுள்ளது.

அசோகம் என்பது வடமொழிப் பெயர். மணிமேகலை யும் கலித்தொகையும் ஏன் செயலை என்ற தமிழ்ப் பெயரை யும் அசோகம் என்ற வடமொழிப் பெயரையும் ஒரே நூலில் பயன்படுத்தின என்பது தெரியவில்லை.

சங்கநூல்களில் செயலை மரத்தின் இலைகளின் தளிரின் அழகையே பல பாடல்கள் கூறியுள்ளன.

இதன் தளிர்கள் மென்மையானதாகவும் சிவந்தும் காணப்படும்.

அந்தளிர் செயலை, செயலை அந்தழை, செயலை அந்தளிர் என்று இதன் அழகிய தளிர் கூறப்பட்டுள்ளது. செயலையின் தளிர் முதலில் செம்மையாகவும் மென்மையாக வும் இருக்கும்.

அரக்கு ஊட்டினாற்போன்ற தழையென்று 'உட்டியன்ன ஒண்தளிர்ச் செயலை என்ற அகப்பாடல் வரி தெளிவாகக் கூறியுள்ளது. ஒண்தளிர் என்பது இதன் பளபளப்பான தளிரைக் குறிக்கும்.

செயலையின் பவளம் போன்று சிவந்த தழையைத் துப்புறழ் தழை யென்று கூறியிருப்பதைக் காணலாம். நெருப்பைப் போன்ற தழையென்று குறிக்க அழலேர் செயலை என்று கூறப்பட்டுள்ளது. எரியுரு வினங் குழைச் செயலை என்றும் கூறப்பட்டுள்ளது. சேந்த செயலையும் சொல்லப்பட்டுள்ளது.

செயலை யந்தளிரேய்க்கும் எழில்நலம் பசலை ஊனப் பட்டு அழிந்ததாகக் கலித்தொகை கூறுவதையும் கவனிக்க வேண்டும்.

# ஞாழல்

ஞாழல் என்ற மரத்தை நெய்தல் திணைக்குரிய மரமாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. சங்க நூல் களில் பல பாடல்களிலே இந்த மரம் குறிப்பிடப்படு கின்றது.

இந்த மரம் எதுவென்று அறிந்துகொள்வதற் குச் சான்றுகள் பாடல்களில் இருந்தாலும் கண்டு பிடிப்பது எளிதன்று. இம்மரம் எதுவாக இருக்கும் என்று பல ஆண்டுகள் நான் ஆராய்ந்ததில் ஞாழல் இக்காலத்தில், 'கண்ணாடி இலை' என்று மீனவரும் மற்றையோரும் அழைக்கும் மரமே என்று தெரி கின்றது.

*ஒருகுழை ஒருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்*
*பருதிஅம் செல்வன்போல் நனை ஊழ்த்த செருந்தியும்*
*மீன்ஏற்றுக் கொடியோன்போல் மிஞிறு ஆர்க்கும்*
*[காஞ்சியும்*

*ஏனோன்போல் நிறம்கிளர்பு கஞலிய ஞாழலும்*
*ஆன்ஏற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்*
*தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல [ஆங்கு*

போதுஅவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக.

—கலித்தொகை - 26 - 4.

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு
கழும முடித்து கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ அகல்மதி
தீம்கதிர் விட்டது போல முகன் அமர்ந்து.

— கலித்தொகை - 56 - 2

தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப விருந்தும்பி யியைபூதச்
செருமிகு நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப.

— கலித்தொகை - 127 - 1

வாணிலா வேய்க்கும் வயங்கொளி யெக்கர்மே
லாராப் பரிய வலவ னளைபுகூஉங்
கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் றுறை. — கலித்தொகை - 131 - 19.

மயில்கொல்? மடவாள்கொல்? மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வம்கொல்? கேளீர்! — குயில் பயிரும்
கன்னி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்தும்என் நெஞ்சு.

— திணைமொழி ஐம்பது - 49 - 3

தந்தார்க்கே ஆமால் தடமென்தோள் — இன்னநாள்
வந்தார்க்கே ஆம்என்பார் வாய்காண்பாம்;- வந்தார்க்கே
காவா இளமணல் தண்கழிக் கானல்வாய்ப்
பூவா இளஞாழல் போது.

— திணைமாலை நூற்றைம்பது - 39 - 4

கடும் புலால் புன்னை கடியும் துறைவ!
படும்புலால் புள்கடிவான் புக்க, தடம்புல் ஆம்
தாழை, மா ஞாழல், ததைந்து உயர்ந்த தாழ்பொழில்,
ஏழைமான் நோக்கி இடம்.

— திணைமாலை நூற்றைம்பது - 44 - 3

மாயவனும் தம்முனும் போலே, மறிகடலும்
கானலும்சேர் வெண்மணலும் காணாயோ — கானல்
இடைஎலாம் ஞாழலும் தாழையும்; ஆர்ந்த
புடைஎலாம் புன்னை புகன்று?

— திணைமாலை நூற்றைம்பது - 58 - 3

வறள் அடும்பின் இவர் பகன்றைத்
தளிர்ப் புன்கின் தாழ் காவின்
நனை ஞாழலொடு மரம் குழீஇய
அவண் முனையின் அகன்று மாறி.

— பொருநராற்றுப்படை, வரிகள் 193 — 198

தாழை, தளவம், முள்தாள் தாமரை
ஞாழல், மௌவல், நறுந்தண் கொகுடி

— குறிஞ்சிப்பாட்டு - வரிகள் 80, 81

ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்
அகரு, வழை, ஞெமை, ஆரம், இனைய
தகரமும், ஞாழலும், தாரமும், தாங்கி
நளிகடல் முன்னியது போலும், தீம்நீர்
வளிவரல் வையை வரவு

— பரிபாடல் - 12

இணர்ததை ஞாழல் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாஇதழ் நெய்தற்
பாசடைப் பிணிக்கழி துழைஇ, புன்னை
வால்இணர்ப் படுசினைக் குருகு இறை கொள்ளும்.

—பதிற்றுப்பத்து-30

துளங்குநீர் வியலகம் கலங்கக் கால்பொர,
விளங்குஇரும் புணரி உரும்என முழங்கும்
கடல்சேர் கானற் குடபுலம் முன்னி
கூவல் துழந்த தடந்தாள் நாரை
குவி இணர் ஞாழல் மாச்சினைச் சேக்கும்.

—பதிற்றுப்பத்து-51

பொரியரை ஞாழலும் புன்னையும் பூத்து
வரிதரு வண்டொடு தேனின மார்க்கும்
திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்தாங்
கருஉரை மார்ப னவலித் திருந்தான்.

—சீவக சிந்தாமணி -515

விரைமர முருட்டுத் திரையுலாப் பரப்பின்
ஞாழ லோங்கிய தாழ்கண் ணசும்பின்
ஆம்பலுங் குவளையுந் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
முடக்காற் புன்னையு மடற்பூந் தாழையும்.

—மணிமேகலை-3-6

ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தா அய்த்
துறையணிந் தன்றவ ரூரே யிறையிறந்து
இலங்குவளை நெகிழச் சா அய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே.

—குறுந்தொகை-50-1

இவளே
தின்சொற் கொண்ட வன்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறைப்
புதுநல னிழந்த புலம்புமா ருடையள்
உதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டும்.

குறுந்தொகை-31-2

இன்னு முளெனே தோழி யிந்நிலை
தண்ணிய கமழு ஞாழல்
தண்ணந் துறைவர்க் குரைக்குநர்ப் பெறினே.

குறுந்தொகை 210-6

எறிசுறாக் கலித்த விலங்கு நீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்
குறியா னாயினுங் குறிப்பினும் பிறிதெ‌ான்.

—குறுந்தொகை 318-2

சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசி னிரங்குந் துறைவன்
நல்கிய நாடவச் சிலவே யலரே.

-குறுந்தொகை 328-1

நனைமுதிர் ஞாழற் சினைமரு திரள்வீ
நெய்தன் மாமலர்ப் பெய்தல் போல
ஊதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்

—குறுந்தொகை 397-1

செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி
ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற் றூசல் தூங்கிக்
கொண்டல் இடுமணற் குரவை முனையின்.

அகம்-20-5

பலருமாங் கறிந்தனர் மன்னே யினியே
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்குங்
கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்

—அகம்-70-9

புலவுநாறு இருங்கழி துழை இப் பலவுடன்
புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்னேர் நுண்டாது நோக்கி
யென்னு நோக்குமிவ் வழுங்க லூரே.

—அகம்-180-வரி-12

தண்டுறை யூரன் பெண்டி ரெம்மைப்
பெட்டாங்கு மொழிப வென்ப அவ்வலர்ப்
பட்டன மாயின் இனியெவன் ஆகியர்
கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்
கழனி யுழவர் குற்ற குவளையும்.

அகம்-210-வரி-3

செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
இனிப்புலம் பின்றே கானலு நளிகடல்.

—அகம்-240-வரி-1

இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து
இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்த தோளே.

—அகம்-270-வரி-8

செல்லல் என்றலும் ஆற்றாய் செலினே
வாழலெ னென்றி யாயின் ஞாழல்
வண்டுபடத் ததைந்த கண்ணிய நெய்தல்
தண்ணறும் பைந்தார் துயல்வர வந்திக்.

—அகம்-370-வரி-9

அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்
இவட்கமைந் தனனாற் றானே
தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-103-2

எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பயலை செய்தன பனிபடு துறையே.

—ஐங்குறுநூறு-141-1

எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினைப்
புள்ளிறை கூருந் துறைவனைப்
உள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

—ஐங்குறுநூறு-142-1

எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை
இனிய செய்து நின்றுபின்
முனிவு செய்தவிவள் தடமென் தோளே.

—ஐங்குறுநூறு-143-1

எக்கர் ஞாழல் இணர்படு பொதும்பர்த்
தனிக்குருகு உறங்குந் துறைவற்கு
இனிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-141-1

எக்கர் ஞாழற் சிறியிலை பெருஞ்சினை
ஓதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கின னினியே.

—ஐங்குறுநூறு-145-1

எக்கர் ஞாழ லரும்புமுதிர் அவிழ் இணர்
நறிய கமழுந் துறைவற்கு
இனிய மன்றவென் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-146-1

எக்கர் ஞாழல் மலரின் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கின னாடே.

—ஐங்குறுநூறு-147-1

எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழும் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

—ஐங்குறுநூறு-148-1

எக்கர் ஞாழற் பூவி னன்ன
சுணங்குவளர் இளமுலை மடந்தைக்
கணங்குவளர்த் தகறல் வல்லா தீமோ.

—ஐங்குறுநூறு-149-1

எக்கர் ஞாழல் நறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்குந் துறைவன்
புணர்வி னின்னா வரும்புணர் வினனே.

—ஐங்குறுநூறு-150-1

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
பொன்னினர் ஞாழல் முனையிற் பொதியவிழ்
புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்
நெஞ்சத் துண்மை யறிந்தும்
என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

—ஐங்குறுநூறு-169-2

கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தல்
கானல் ஞாழற் கவின்பெறு தழையள்
வரையர மகளிரின் அரியளென்
நிறையரு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

—ஐங்குறுநூறு-191-3

பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்காற்
றான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்குஞ்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
பெரும்புலம் புற்ற நெஞ்சமொடு பலநினைந்து.

— நற்றிணை - 31 - 5

இற்றாங் குணர வுரைமதி தழையோர்
கொய்குழை யரும்பிய குமரிஞாழல்
தெண்டிரை மணிப்புறந் தைவருங்
கண்டல் வேலிநுந் துறைகிழ வோற்கே.

— நற்றிணை - 54 - 9

திறையப் பெய்த அம்பி காழோர்
சிறையருங் களிற்றிற் பரதவர் ஒய்யுஞ்
சிறுவீ ஞாழற் பெருங்கடற் சேர்ப்பனை
ஏதி லாளனும் என்ப போதவிழ். — நற்றிணை - 74 - 5

இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை ததைந்த வெண்மண லொருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே உதுவே
பொம்மற் படுதிரை நம்மோ டாடிப். — நற்றிணை-96-1

மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞர் உறுவி யாய்மட நிலையே.—நற்றிணை-106-7

நின்வாய்ப் பணிமொழி களையா பன்மாண்
புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணங்கமழ் கானல் மாணல மிழந்த
இறையே ரெல்வளைக் குறுமகள். — நற்றிணை -167 -8

சிறுவீ ஞாழற் தேன்தோய ஒள்ளிணர்
நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த

வண்டற் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅங்.
—நற்றிணை - 191 - 1

இலங்கெயிற் றேஎ ரின்னகை மகளிர்
உணங்குதினை துழவுங் கைபோல் ஞாழல்
மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்
தன்னொடு புணர்த்த வின்னமர் கானல்.
-- நற்றிணை - 267 - 4

**வளரும் இடம்**

ஞாழல் மரமானது கடற்கரையோரங்களில் சதுப்பு நிலத்தில் காணப்படும் மரமாகும். இது உப்பு நீர் சூழ்ந்த கடற்கரையையொட்டிய காடுகளில் (MongroVe forests) மிகுதியாகக் காணப்படும். உப்பு மிகுந்த சதுப்பு நிலக் காடுகளில் நன்றாக வளரும் மரங்களில் ஞாழல் மரமும் ஒன்றாகும். புன்னை, தாழை, கண்டல், தில்லை முதலிய மரங்கள் கடற்கரை சதுப்புநிலக் காடுகளில் (Mongrove forests) மிகுதியாகக் காணப்படும்.

இன்றும், சிதம்பரத்தை யடுத்துள்ள பிச்சாவரக் கடற்கரைக் காடுகளில் இந்த மரங்களைக் காணலாம். கடற்கரைச் சதுப்புநிலக் காடுகள் மிகுதியும் அழிக்கப்பட்டதால் இப்பொழுது ஞாழல் மரத்தைக் காண்பது அரிதாக இருக்கின்றது.

'ஊர்க்கால் நிவந்த பொதும்பரிலும்' (கலி. 56), பெருங் கடல் வரிமணலிலும்' (கலி.127.) 'வயங்கொளி எக்கர் கொண்ட கானலிலும்' (கலி. 131) ஞாழல் மரங்கள் உள்ளதைக் கலித்தொகை கூறியுள்ளது. 'மாநீர்த்திரை பூம்பொழில்' (தி. மா. ஐ—49, ஞாழல் மரம் இருந்ததைத் திணை மாலை நூற்றைம்பது கூறியுள்ளது.

கழிக்கானலிலும் (தி. மா. நூற்.39) 'கடற்றுறையில் உயர்ந்த தாழ்பொழிலிலும் 'மறி கடலும்கானலும் சேர் வெண்மணலிலும்' ஞாழல் காணப்பட்டதாகத்திணை மாலை நூற்றைம்பது கூறியுள்ளது. 'கரைகெழு பெருந்துறையிலும்' (பதிற்.30) கடல்சேர் கானலிலும்' பதிற். 51 ஞாழல் காணப் பட்டதைக் கூறியுள்ளது.

'விரைமா முருட்டுந் திரையுலாப் பரப்பில்' ஞாழல் காணப்பட்டதாக மணிமேகலை (8-6) கூறியுள்ளது.

ஞாழலின் சிறிய பூவும் மருதின் சிவந்த பூவும் காய்ந்து விழுந்து துறைக்கு அணி செய்வதைக் குறுந்தொகை (50) கூறியுள்ளது.

| | |
|---|---|
| தண்ணந்துறையிலும் | குறுந். 310 |
| எறி சுறாக் கலித்த விலங்குநீர்ப் பரப்பிலும் | குறுந். 318 |
| கடற்கரைத் துறையிலும் | குறுந். 328 |
| ஊதை தூற்றும் உரவு நீரிலும் | குறுந்.397 |

ஞாழல் காணப்பட்டதைக் கூறியுள்ளது.

| | |
|---|---|
| கொடுங்கழியிலும் | அகம். 20 |
| கானலம் பெருந்துறையிலும் | அகம். 70 |
| புலவு நாறிருங் கழியிலும் | அகம். 180 |

'தண்டுறை ஊரன் கழனியிலும்' (அகம். 216), 'நளி கடற் கானலிலும்' (அகம். 240), 'இருங்கழியிலும்' (அகம். 270) ஞாழல் காணப்பட்டதை அகநானூறு கூறி யுள்ளது. 'எக்கர் ஞாழல்' என்றே ஐங்குறுநூற்றில் பத்துப் பாடல்கள் துவங்குகின்றன.

'பெருங் கடற்கரையிலும்' 169), 'கானலிலும்' 191) ஞாழல் இருந்ததாக ஐங்குறுநூறு கூறியுள்ளது. 'பனிக்கழித்துறை'யிலும் (நற். 31), 'கடற்கரை தெண்டிரை

யிலும்' (நற். 54), 'பெருங்கடல் அருகிலும்' [நற். 74] புதுவது புணர்ந்த பொழிலிலும்' [நற். 96], 'மணங்கமழ் கானலிலும்' [நற். 167], 'இன்னமர் கானலிலும்' (நற். 267) 'கடல் துறைக் கானலிலும்' [நற். 311], 'கடற்கரைத் துறையிலும்' [நற். 315] ஞாழல் வாழ்ந்ததை நற்றிணை கூறியுள்ளது.

ஞாழல் கடற்கரைச் சதுப்பு நிலத்தில் காணப்படுவதை 'திரையுலாப் பரப்பின் தாழ்கண் அசும்பில்' எனத்தெளிவாக மணிமேகலை கூறியுள்ளது. ஞாழல் ஓங்கி வளர்ந்ததாக அது தெரிவிக்கிறது. தாழ்கண் அசும்பு என்பது, நீர் ஊறும் தாழ்ந்த நிலத்தையே குறிக்கும்.

இவ்வாறு பல பாடல்களில் கடற்கரைத் துறையிலும், கானலிலும் கானற் பொழிலிலும் அசும்பிலும் ஞாழல் இருப்பதாகக் குறிக்கப்பட்டு இருப்பதால், ஞாழல் மரம் எது என்பதைச் செடிநூலறிவொடு ஆராய்ந்து பார்த்தால் கண்டு கொள்ளலாம்.

இம் மரம் வாழுமிடச் செய்தியிலிருந்தும் இலை, பூ முதலியவைகளைப்பற்றிக் கூறிய செய்திகளிலிருந்தும் ஞாழல் மரம் எதுவென்பதை உறுதியாக அறுதியிட்டுக் கூறலாம்.

கானலிலும், கடற்கரைச் சூழலிலும், கானற் சோலையிலும் ஞாழலொடு புன்னை, புன்கு, அடும்பு, செருந்தி, தாழை, கண்டல் ஆகியவை கூறப்பட்டிருப்பதை உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். இந்த மரங்களெல்லாம் நெய்தல் நிலத்திலே கடற்கரைக் காடுகளில் காணப்படுவனவாகும்.

நற்றிணை 54 ஆவது பாடலில் கூறப்பட்ட கண்டல், கடற்கரைச் சதுப்புநிலக் காடுகளிலே மட்டும் காணப்படும் மரமாகும். கண்டலை typical mongrove tree என்று கூறலாம்.

இன்றும் பிச்சாவரக் காடுகளில் காய்க் கண்டல், வெண் கண்டல், கருப்புக் கண்டல் முதலிய கண்டல் மரத்தின் வகைகளைக் கூறுவர். ஞாழல் மரம் கடற்கரைக் காடுகளில் (coastal forest of India) காணப்படும் என்று செடி நூலார் கூறியுள்ளனர்.

அடிமரமும் இலையும்

சீவக சிந்தாமணி (515) 'பொரியரை ஞாழல்' என்று கூறியுள்ளது. அடிமரப்பட்டை பொளிந்தும், பொரிந்தும் காணப்பட்டதாகக் கூறிய செய்தி உண்மையேயாகும். செடி நூலாரும் bark longtiudinally furrowed என்று கூறியிருப்பதைக் காணலாம். ஞாழல் மரம் ஓரளவு உயரமாகவும், பெரிதாகவும் [attaining considerable size] வளரக் கூடியது. ஞாழல், ஓங்கு சினையில், அதாவது, கிளையில் தாழை மரத்தின் வீழ்களால் ஆன கயிற்று ஊஞ்சலில், மகளிர் விளையாடுவதை அகநானூறு (20) கூறியுள்ளது.

கலித்தொகையில், [56] 'ஊர்க்கால் நிவந்த [உயரிய] ஞாழல் என்று காணலாம்.

'எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை' என்று ஞாழலின் உயரமான கிளைகளை ஐங்குறுநூறு [148] கூறியுள்ளது. 'ஞாழல் ஓங்கிய தாழ்கா அகும்பு' என்று மணிமேகலை [8-6] கூறுவதும் கவனிக்கத்தக்கதாகும். 'ஏக்கர் ஞாழல் நறுமலர் பெருஞ்சினை என்று ஐங்குறுநூறு [150] ஞாழலின் பெரிய கிளைகளைப்பற்றிக் கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும்.

ஞாழலின் கிளைகளைக் 'கருங்கோட்டிருஞ்சினை' என்று அகநானூறு [240] கூறியிருப்பதும் உண்மையே.

மற்றும் 'ஏனோன்போல் நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும்' என்று கலித்தொகையும் [26] இந்த மரத்தின் கரிய நிறத்தைப் பற்றிக் கூறியுள்ளது.

ஞாழலின் இலை அழகாக இருக்கும். இலைகள் முட்டை வடிவில், மேலே வழவழப்பாகவும், கீழே வெள்ளி போன்ற நிறமுடைய நுண்ணிய சுனைகளுடனும் மெத்தென்று காணப்படும்.

செடி நூலில் இதன் இலையைக் குறித்து 'Leaves elliptic oblong cariaceous, glabrous above, entirely covered beneath with minute silvery scales' என்று கூறப் பட்டுள்ளது.

ஞாழல் இலையில் கீழ்ப்பாகம் வெள்ளியைப்போல் பள பளவென்று வெண்மையாக இருப்பதால் ஞாழல் மரத்தைக் 'கண்ணாடி இலை' என்று இக் காலத்தில் அழைக்கின்றனர்.

'ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை' என்று ஐங்குறுநூறு (145) ஞாழல் மரத்தின் பெரிய கிளைகளில் சிறிய இலைகள் இருப்பதைக் குறிப்பிட்டுள்ளது. ஞாழலின் இலைகள் இரண்டு முதல் நான்கு அங்குலம் நீளம் வரை இருக்கும். ஞாழல் மலர்க் கொத்தை மகளிர் கூந்தலில் வைத்து வாரி முடித்துக் கொள்ளும் பழக்கம் இருந்ததாகக் கலித்தொகை [56] கூறும்.

இதைக் கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு கழும முடித்து' என்னும் செய்தியிலிருந்து அறியலாம்.

ஞாழலின் இலைகளைக் கொய்வது பற்றிச் சங்கப் பாடல்களில் கூறப்பட்டுள்ளது. 'கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்' என்று அகநானூறு 216 கூறியுள்ளது. 'கொய் குழை அரும்பிய குமரி ஞாழல்' என்று மகளிர் ஞாழலின் மெல்லிய தளிர்களைக் கொய்யும் பழக்கத்தை நற்றிணை 54 கூறியுள்ளது.

ஞாழல் இலைக் கொழுந்துகளைப் பறித்து, தலைவி கையால் தேய்ப்பதைப் பற்றி நற்றிணை(106)'முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்' என்று கூறியுள்ளது.

ஞாழல் பூவைப்பற்றிப் பல பாடல்கூறுகின்றன. ஞாழல் பூ கொத்தாகப் பூக்கும் என்பதை 'இணர்' என்று பல பாடல்களில் கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

கலித்தொகை, 'முதிர் இணர்' (56)என்றும் 'தெரியிணர்' (127) என்றும் கூறியுள்ளது.

'இணர்தகை ஞாழல்' (பதிற். 30-1)என்றும், 'குலியிணர் ஞுழால்' (பதிற். 51-5) என்றும் பதிற்றுப்பத்து கூறியுள்ளது, ஐங்குறுநூறு, 'ஞாழலிணர்' [144] 'பொன்னிணர்' [169[ என்று கூறியுள்ளது.

ஞாழல் கொத்து Panicles என்று செடிநூலில் கூறப்பட்டுள்ளது. கொத்தாகப்பூக்கும் ஞாழலின் இணர்தொங்கிக் கொண்டு இருக்கும். Drooping Panicles என்று கூறுவர்.

இதையே 'தாழிணர்' என்று நற்றிணை(106) யும், 'ஞாழல் இறங்கிணர்' என்று ஐங்குறுநூறும் (142)பொருத்தமாகக் கூறியுள்ளன.

ஞாழலின் மொக்கு 'நனை ஞாழல்' என்று பொருநராற்றுப்படையில் [197ஆம் வரி] குறிப்பிடப்பட்டுள்ளது.

ஞாழலின் பூக்கள் செம்மஞ்சள் நிறமும் மஞ்சள் நிறமும் கலந்து காணப்படும். 'ஐயவியன்ன சிறுவீ ஞாழல்' என்று குறுந்தொகை (50-1) கூறியுள்ளது. நற்றிணையில் நெய்தல் திணைக்குரிய ஐந்து பாடல்களிலும் (31, 74, 191, 311, 315) 'சிறுவீ ஞாழல்' என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

செடிநூலார் ஞாழலின் பூவைச் சிறியது(Flowers small) என்று கூறியுள்ளனர். 'நனைமுதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ' என்று குறுந்தொகை (397]கூறியுள்ளது. அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது மலர் மீன் முட்டையைப் போன்று திரண்டு இருப்பதாகக் கூறியிருப்பது கவனிக்கத் தக்கதாகும்.

'பொன்வீஞாழல்' [அகம். 70], 'செவ்வீ ஞாழல்' (அகம்-240), பொன்னிணர் ஞாழல்' (ஐங். 169] என்று ஞாழலின் பூவின் நிறத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது.

ஞாழற்பூ மஞ்சள் கலந்த செம்மஞ்சள் நிறமாக Orange yellow இருக்கும் என்று அறிவியலார்கூறுவர். இதைச் 'செவ்வீ' என்று கூறியதும் ஒருவகைச் சிவப்பு நிறத்தோடு இருத்தலால் ஆகும். பொன்னிறமான பூ என்பதையும் கவனிக்க வேண்டும்.

'கானல் கமழ் ஞாழல் வீயேய்ப்பதையும் தோழியென் மேனி சிதைத்தான்' என்று கலித்தொகை (131) கூறுமிடத்தில் தலைவியின் மேனி பசலையுறு வதற்கு ஞாழல் பூவின் நிறத்தை ஒப்பிட்டிருப்பதைக் காணலாம். தலைவியின் மேனிச் சுணங்கிற்கு நிறவொப்புமை காரணமாக ஞாழல் பூவை உவமையாகக் கூறியதைக் காணலாம்.

'சிறுவீ ஞாழல்... சுணங்கின் ஐதுபடத் தாஅங்கு' என்று நற்றிணையும் (191), 'எக்கர் ஞாழற் பூவின் அன்ன சுணங்கு வளரிள முலை' என்று ஐங்குறுநூறும் (149) கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

ஞாழல்மரம் இளவேனிலில் பூக்கும் என்பதும் உண்மையாகும்.

சங்கப் புலவர்கள் நெய்தலுக்குரிய மரமாக ஞாழலைக் கூறியதன் நுண்மாண் நுழைபுலத்தை நன்கு அறியலாம். ஞாழல் மரம், நெய்தல் நிலத்தில்தான் காணப்படும். அதிலும் உப்பு நிறைந்த கடற்கரைக் காடுகளில்தான் காணப்படும். ஞாழல் மரத்தை வடநாட்டு மொழிகளில் 'சுந்திரி (Sundri) என்றழைப்பர்.

கங்கையாறும், பிரம்மபுத்திராவும் கடலில் கலக்கும் உப்புநீர் முகத்துவாரத்தில் ஞாழல்மரம் பல ஏக்கர்கள்

பரப்பில் காடாகக் காணப்படுகின்றது. இங்கு உப்புநீர் தங்கும் இடத்தில் ஞாழல் மரங்களே மிகுந்து காணப்பட்டதால் அக் காடுகள் 'சுந்தர வனக் காடுகள்' (Sundarbans) என்றழைக் கப்பட்டது.

இந்தியாவில் இருந்த பலவகைக் காடுகளில் ஞாழல் காடு தனியாகப் பிரித்துக் கூறபபட்டுள்ளது. ஞாழல் மரம் மிகுந் திருந்ததால் 'ஞாழல் பூம்பொழில்' என்று திணைமொழி ஐம்பது (49) கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

ஞாழல்மரம் பூத்திருக்கும்போது பார்ப்பதற்கு அழகாக இருக்கும். இதன் இலைகளும், பூவும் அழகாக இருக்கும். இந்த அழகின் காரணமாக 'கன்னி இளஞாழல்' என்று திணைமொழி ஐம்பதும் (49), 'இள ஞாழல்' திணைமாலை நூற்றைபது (39)ம் குமரி ஞாழல் என்று நற்றிணையும் (54) கூறியுள்ளன.

ஞாழல் மரம் மிகவும் அழகாயிருப்பதைக் குறித்தே Evevgreen orna- mental tree' என்று செடிநூலில் சொல்லப் பட்டுள்ளது. இந்த மரம் நேராக வளராது.

யாப்பருங்கல விருத்தியுரையில் கடற்கரையில் இருந்த ஒரு மரத்தை, 'இடவ, குடவ, தடவ' என்று வளைந்து, திரிந்து பெரிதாகக் காணப்படும் என்று கூறியுள்ளதைக் காணலாம். அது ஞாழலாகவே இருக்கலாம்.

> 'ஞாழலென்பது ஒருவகைக் குங்குமம், ஒருவகைக் கொன்றை, கோங்கு, பலினி முதலிய பல மரங்கட்குப் பெயரா மாயினும் நெய்தற் கருப்பொருளில் அது பலினி யையே குறித்து வருமென்ப;பலினி என்பது வடமொழிச் சிதைவு'

என்று உரை யாசிரியர் அனந்தராமய்யர் கலித்தொகைப் பாடலுக்கு (127) அடிக்குறிப்புரை எழுதியுள்ளது சிறந்த உரையாகும்.

வடமொழி இலக்கியங்களில் ஞாழல் மரம் பலினி என்றே கூறப்பட்டுள்ளது. குங்குமம், கொன்றை, கோங்கு என்ற பெயர்கள் ஞாழலைக் குறிக்கமாட்டா. ஏனெனில் அவை வெவ்வேறு மரங்களாகும்.

திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி ஆகிய நிகண்டுகள் ஞாழலை- பலினி என்று கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும் இந்த வடமொழிப் பெயரே ஞாழலைக் கண்டுகொள்ள உதவும். ஞாழலை, புலிநகக் கொன்றை என்றும் சிலர் கூறுவர்.

சங்க நூல்களில் அகநானூறு 33, 144, 174, 314, 344, 353, குறுந்தொகை 182, 215, நற்றிணை 82, 297, 321, புறநானூறு 388 ஆகிய பாடல்களை 'மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார்' என்ற புலவர் இயற்றியதாக நூற்பதிப்புக்களில் உள்ளது.

அளக்கர் என்ற சொல்லுக்கு உப்பளம், சேறு என்ற பொருள்களைப் பிங்கலந்தை நிகண்டு குறிப்பிட்டுள்ளது. ஞாழல் மரமானது உப்பளச் சூழ்நிலையிலும் கடலோரத்து சேற்றுக் காடுகளிலும் வளரும்.

ஆதலின், மேற்சொன்ன பாடல்களை எழுதியவர் 'அளக்கர் ஞாழலார்' என்று இருத்தல் வேண்டும். இப்போதைய நூல்களில் கூறப்படும் 'அளக்கர் ஞாழார்' என்ற பெயர் பொருளற்றதாகும்.

இந்தப் புலவர் பெயர் அளக்கர் ஞாழல் என்று அடைமொழியோடு பாடிய சொற்களால் பெயர் பெற்றிருக்க வேண்டும். மற்றும் 'அளக்கர் ஞாழல்' என்ற தொடர் இப் புலவர் பாடிய பாடல்களில் இருந்திருக்க வேண்டும். சங்க நூல்களைத் தொகுக்கும்போது இப் பாடல் விடப்பட்டு இருக்கலாம்.

ஞாழல் மரம் இன்று கேரளக் கடற்கரையில் நிறையக் காணப்படுகின்றது. சங்க காலத்தில் கேரளம் தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்ததால், சங்கப் புலவர்கள் ஞாழலைக் கண்டு பாடினர் என்று தெரிகின்றது. ஞாழலை ஆங்கிலத்தில் 'sundri என்றும், அறிவியலில் Heritiera Littoralis (Dryand) என்றும் கூறுவர்.

# ஞெமை

'வருவர் வாழி தோழி அரச
யானை கொண்ட துகிற்கொடி போல
அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி
ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர'
— அகம். 111

'வெயிற்கவின் இழந்த வைப்பிற் பையுள் கொள
நுண்ணுதின் நிவக்கும் வெண்ஞெமை வியன் காட்டு
ஆள் இல் அத்தத்து அளியன் அவனொடு' — அகம். 145

'புலம்புறுங் கொல்லோ தோழி சேணோங்கு
அலந்தலை ஞெமையத்து ஆள் இல் ஆங்கண்
கல்சேர் இருந்த சில்குடிப் பாக்கத்து' — அகம். 187

'இந்நிலை அறியாய் ஆயினுஞ் செந்நிலை
அமை ஆடு அம்கழை தீண்டிக் கல்லென
ஞெமையிலை உதிர்த்த எரிவாய்க் கோடை
நெடுவெண் களரி நீறுமுகந்து சுழலக்
கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு' — அகம். 353

'புன்புறப் பெடையொடு பயிரி யின்புற
விமைக்கண் ஏதா கின்றோ ஞெமைத்தலை
யசைஇ யொருபருந் திருக்கும்
வானுயிர் பிறங்கன் மலையிறந் தோரே'

— குறுந்தொகை 285

'அறியேன் வாழி தோழி அறியேன்
ஞெமையோங் குயர்வரை இமயத் துச்சி
வாஅன் இழிதரும் வயங்குவெள் அருவிக்
கங்கையம் பேரியாற்றுக் கரையிறந் திழிதரும்

— நற்றிணை. 369

'மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப

— நற்றிணை. 394

'அகரு வழை ஞெமை ஆரம் இனைய — பரிபாடல் 12-5

சங்க நூல்களில் ஞெமை என்று மரப் பெயர் வழங்கி யுள்ளது. தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் வெல் லெழுத்து விலக்கி, கெல்லெழுத்து மிகுத்தலைப்பற்றி வரும். சூத்திரத்தில் ஞெமை மரமும் அதே மரமான நமையும் கூறப் பட்டுள்ளது.

'விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயரும் சேமர இயல'

என்று எழுத்ததிகார சூத்திரம் 282 கூறியுள்ளது. அதன்படி ஞெமைங்கோடு, நமைங்கோடு என்று மெல்லெழுத்து கசதப முதலிய மொழிமேல் தோன்றும் என்று உணர்க என்று கூறப் பட்டுள்ளது.

தொல்காப்பிய சூத்திரத்தின்படி ஞெமை நமையென்றும் அழைக்கப்பட்டது தெரிகின்றது. இந்த மரம் மிகவும் உறுதியானது.

ஞெமை என்ற மரத்தைக் கண்டுபிடிப்பது எளிதாகும். தொல்காப்பிய சூத்திரமே நமை என்று கூறியுள்ளது. இன்றும் இம் மரம் நமை என்றும், வெள்ளை நாகை என்று தமிழிலும், வெள்ளை நாவா என்று மலையாளத்திலும் கூறப்பட்டுள்ளது.

கோயமுத்தூர் மாவட்டத்தில் வெக்காலி என்றும் நமை என்றும் அழைக்கப்படுகின்றது. நமைச்சல் போல் மரப் பட்டை உரிந்திருப்பதால் நமை என்று பெயர் பெற்றிருக் கலாம்.

இதனுடைய அடிமரம் உறுதியானது. அதனால் ஆங்கிலத்தில் Axle wood என்று அழைக்கப்பட்டுள்ளது. அறிவியலில் இந்த மரம் Anogesius latifolia என்று அழைக்கப்பட்டுள்ளது.

❀

# தில்லை

'அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்
குருளை நீர் நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்'
—நற்றிணை 195

'கறங்குவெள் ளருவி யேற்றலின் நிறம் பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோரு'
—புறம். 251

'தில்லை பாலை கல்லிவர் முல்லை'
குறிஞ்சிப்பாட்டு 77

'தில்லை வேலி யிவ்வூர்' —ஐங்குறுநூறு 131

'மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்'
– கலித்தொகை 133

'.........................முரிதிரிந்த
கண்டலந்தண் தில்லை கலந்து கழிசூழ்ந்த
மிண்டலந் தண்தாழை யிணைந்து'
—திணைமாலை நூற்றைம்பது

தில்லையென்றொரு மரம் தமிழ்நாட்டில் கடற்கரைக் கழியோரங்களில் காணப்படுகின்றது. சிதம்பரத்திற்கு அருகிலுள்ள பிச்சாவரச் சதுப்புநிலக் காடுகளில் தில்லை மரம் நிறைய உள்ளது.

கடற்கரைக் கழியில் தில்லைமரப் பொதும்பில் நீர்நாய் பள்ளிகொள்ளும் என்று நற்றிணை கூறியது உண்மைச் செய்தியாகும்.

கழிசூழ்ந்த இடத்தில் கண்டலொடும் தில்லை இருந்த தாகத் திணைமாலை நூற்றைம்பது கூறியுள்ளது.

தில்லை மரங்களையே வேலியாக இருந்த ஊரைப்பற்றி ஐங்குறுநூறு கூறியுள்ளது.

தில்லை மரத்தின் இலை பச்சையாக இருந்து பின்ன மஞ்சளாகி அதன் பின்னர் சிவந்து காணப்படும். அது செம் பட்டையாதலால் அதைப் புல்லென சடைக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

தில்லை மரத்திற்குப் பால் உண்டு. அது கண்ணில் பட்டால் கண் குருடாகிவிடும். அதனால் கண்ணைக் குருடாக்கும் மரம் என்று அழைக்கப்படுகின்றது.

செடி நூலில் தில்லையைExoccarion Agallocha என்றழைப்பர்.

❋

# தேக்கு

'புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்'

அகம். 107

'கடுகவின் ஒழியக் கடுங்கதிர் தெறுதலின்
நீடுசினை வறிய வாக ஒல்லென
வாடுபல் அகலிலை கோடைக்கு ஒய்யும்
தேக்கமல் அடுக்கத்து ஆங்கண் மேக்கெழுபு'

அகம். 143

'தேக்கமல் சோலைக் கடறோங் கருஞ்சுரத்து'

அகம். 225

'காப்பில் வைகுந் தேக்கமல் சோலை
நிரம்பா நீளிடைப் போகி'

அகம் 251

'கடுவளி யெடுத்த கால்கழி தேக்கிலை
நெடுவிளிப் பருந்தின் வெறியெழுந்தாங்கு'

அகம். 299

'சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்
அகலிலை குவித்த புதல்போற் குரம்பை'
அகம். 315

'மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவியடைத் தீரத் தேக்கிலைப் பகுக்கும்'
அகம். 311

'தெய்வ மடையிற் தேக்கிலைக் குவைஇறும்
பைதீர்க் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்'
பெரும். 104-105

தேக்கு மரம் யாவர்க்கும் தெரிந்ததொன்றாகும்.

நீண்ட நாள் பயனுடைய பலகைகளைத் தரும் மரமாகும். பெரும்பாலும் வறட்சியான மலைப்பாங்கான இடங்களிலும் சோலைகளிலும் காணப்படும்

சங்கநூல்களில் தேக்குமரம் நிறைந்த 'தேக்கமஞ் சோலை' கூறப்பட்டுள்ளது.

தேக்கு மரத்திற்கு அகன்ற இலை உண்டு. அதனால் அதைச் சங்ககாலத்தில் வழிப்போக்கர் உண்கலமாகப் பயன் படுத்தினர்.

தேக்கை ஆங்கிலத்தில் Teak என்றும் அறிவியலில் Tectona qrandis என்றும் அழைப்பர்.

o

# நாகம்

'கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தண் மலர் நாகத்து'

—பொருநராற்றுப்படை 208-209

'பெருங்கல் நாடன் பேகனுஞ் சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழி'

—சிறுபாணாற்றுப்படை 287-88

'நளிமலை நாடன் நள்ளியும் நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த

—சிறுபாணாற்றுப்படை 107-108

'ஒருதான் றாங்கிய உரனுடை நோன்றாள்
நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்'

—சிறுபாணாற்றுப்படை 115-116

'ஆரம் காழ்வை கடியிரும் புன்னை
நரந்த நாக நள்ளிருள் நாறி' —குறிஞ்சிப்பாட்டு 93-94

'நாகந் திலக நறுங்காழ் ஆரம்
கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி'

—மலைபடுகடாம் 520-521

'போகிய நாகம் போக்கருங் கவலை' —நற்றிணை 82

'ஆசினி முதுகளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர ஊகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்'
—திருமுருகாற்றுப்படை 301-303

'வரையன புன்நாகமும்
கரையன சுரபுன்னையும்' —பரிபாடல் 11,16-17

'தளிபொழி சாரல் ததர்மலர் தாஅய்
ஒளிதிகழ் உத்தி யுருகெழு நாகம்
அகரு வழை ஞெமை ஆரம் இனையத்'
—பரிபாடல் 12,3-5

'குல்லை வகுளங் குருக்கத்தி பாதிரி
நல்இணர் நாக நறவஞ் சுரபுன்னை
எல்லாங் கமழும் இருசார் கரைகலிழத்'
—பரிபாடல் 12,79-81

'நனைசினையின நகுவிரையன நலனுடைய நாகம்'
—நீலகேசி-அரசன் சிறப்பு 16

'நீள்நாக நறுந்தண்டார் தயங்கப் பாய்ந்து அருளினாற்'
—கலித்தொகை 39

'நாக நாறு நரந்தை நிரந்தன' —சிலப்பதிகாரம் 15-18

'குரவமும் வகுளமுங் கோங்கமும் வேங்கையும்
அரசமும் நாகமுந் திலகமும் மருதமும்'
—சிலப் 13: 151 -2

'நாகந் திலக நறுங்காழ் ஆரம்' —சிலப். 15-18

'நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்'
—மணிமேகலை 3-162

'........................புதனாக
பொன்பயந்த வெள்ளிபுறமாகப் பூங்கோதாய்'
— திணைமாலை நூற்றைம்பது 117

சங்க நூல்களில் நாகம் என்ற மரம் சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. நாகம் என்ற பெயர் அரிதாக இந்த மரத்திற்கு இன்றும் வழங்குவதால் இதைக் கண்டுகொள்வது எளிதேயாகும்.

முதலில் கவனிக்கப்பட வேண்டியது இதன் பூவாகும். இது அரிய நறுமண முடையது.

நறுவீயுறைக்கும் நாகம்
நறும்போது கஞலிய நாகு முதிர் நாகம்
நாக நறுமலர்
நறுவிரையன நாகம்
நாகம் நாறும்

என்றெல்லாம் இதன் பூ சங்க நூல்களில் குறிப்பிடப் படுவதால் இந்த மரத்தைக் கண்டுகொள்வது எளிதாக உள்ளது.

இதன் மகரந்தத் தூள்களை 'நாககேசரம்' (Nagkesi) என்று நறுமணமூட்டும் பொருளாகக் கடைகளில் விற்கப் படுகிறது. நீலகேசியில் 'நகு விரையன' என்பதை இது சார்பாகக் கவனிக்கவேண்டும்.

சீவகசிந்தாமணியில் நாக மரத்தைப்பற்றிச் சில செய்திகள் கூறப்பட்டுள்ளன.

'மழைதவழ் சோலை மலைமிசை நீண்ட
குழைதவழ் குங்குமங் கோழரை நாகம்'

—சீவகசிந்தாமணி 524

'மணிமலர் நாகஞ் சார்ந்து வழையொடு மரவநீழற்'

—சீவகசிந்தாமணி 1569

'மரவ நாக மணங்கமழ் சண்பகம்
குரவம் கோங்கம் குடப்புரை காய்வழை'

— சீவகசிந்தாமணி 1918

'நாகத் தல்லியும் ஏலத் திணரும்'

— பெருங்கதை - நருமதை கடந்தது 24

'நாகத் தல்லியும் நயந்ததக் கோலமும்'

— பெருங்கதை - இரவெழுந்தது 132

நாகத்தல்லி அதன் நறுமணமுடைய கேசரத்தையே குறிக்கும். சீவகசிந்தாமணி உரையிலேயே சில பாடல்களில் சுரபுன்னை என்றும், 1608 ஆம் பாடலில் சுரபுன்னையன்று என்றும் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்கவேண்டும்.

நாகம் சுரபுன்னையன்று. வழைபே சுரபுன்னை யாக இருக்க முடியும்.

வழைக்கும் சுரபுன்னை என்று பொருள் கூறி யிருப்பதைக் காணலாம்.

நாகம் பெரிய வெள்ளைப் பூக்களை உடையது. இதன் நறுமணமிக்க பூவிற்காக மலையாளத்திலும் ஜாவாவிலும் இந்த மரத்தை வளர்க்கிறார்கள். பூவைக் காயவைத்துச் சந்தனம் முதலிய நறுமணப் பொருட்களுடன் பயன்படுத்து வர். (when dried they are mixed with other aromatics such as white sandal wood and used for perfumming ointment).

பர்மாவில் தலையணையில் நாகமலரின் காய்ந்த மகரந் தத் தாள்களை நறுமணத்திற்காக அடைத்துப் பயன்படுத்து கிறார்கள். இதன் போன்போன்ற மகரந்தத் தாள்களையும் வெள்ளி போன்ற வெள்ளைப் பூங்கோதையையும் திணை மாலை நூற்றைம்பது கூறியதைக் கவனிக்க வேண்டும்.

இம் மரத்தின் இலை அழகாக இருக்கும். மேற்பக்கம் பளபள வென்று இருக்கும்.

The glossy leaf green above, glorious white below and the lorge white flowers are very pleasing.

நாகம் பசுங்காடுகளில் வளர்கின்றது. கூட்டம் கூட்டமாகக் காணப்படும்.

'In these forests it often forms consociations which may cover a considerable area.' என்று கூறப்பட்டுள்ளதை இது சார்பாகக் கவனிக்கவேண்டும்.[1]

இதையே 'போகிய நாகம் போக்கருங் கவலை' என்று நற்றிணை (82) கூறியுள்ளது. 'நறுவீ யுறைக்கும் நாக நெடுவழி' என்று சிறுபாணாற்றுப்படை கூறியுள்ளது. இயற்கையில் கூட்டமாகக் காணப்படும் என்பதையே இது குறிக்கின்றது.

போகிய என்ற சொல் இவ்விடத்தில் நெடுமை என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது.

'வார்தல் போகல் ஒழுகன் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள' (தொல். 800)

என்று வரும் தொல்காப்பியச் சூத்திரத்தில் போகல் என்ற சொல் நெடுமை என்ற பொருளில் வருவது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. 'வெள்வேல் விடத்தேரொடு காருடை போகி' என்ற பாடல் வரியையும் சேனாவரையர் எடுத்துக் காட்டியுள்ளார்.

மலைக்காடுகளில் நாக மரங்களே ஓரே இனமாக, சூழலாகநெடுந்தொலைவு காணப்படுவதையே கூறியுள்ளனர். போகும் வழியெல்லாம் எளிதில் போக முடியாதபடி அடர்ந்து நாகமரம் இருந்த கவர்த்த சூழலையே 'போகிய நாகம் போக்கருங் கவலை' என்ற வரி குறிப்பிட்டுள்ளது.

---

1 (Manual of Forest Botany — N L, BOR; O.U.P.)

இந்த மரத்தைப் பிற நறுமணமுடைய மரத்தொடு செடியொடு கூறுவது வழக்கம். நாகம், நறவம், நாக நாறு நரந்தை, நரந்தை, நரந்தமும் நாகமும், நாகந்திலகம், நாகமும் அகிலும் என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

நாகமரம் உயர்ந்த காடுகளில் வளரும் என்பதைத் திருமுருகாற்றுப்படை கூறியுள்ளது. ஊகக்குரங்கும் முசுக் குரங்கும் உயர்ந்த காடுகளில் வாழ்கின்றன. இந்தச் சூழ்நிலையிலேயே நாகம் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்கவேண்டும்.

நாகம் என்ற சொல்லுக்குச் சுரபுன்னை என்று உரையாசிரியர் சிலர் பொருள் கூறியுள்ளனர். அது தவறு. பரிபாடல் 110ஆம் பாட்டில் சுரபுன்னை என்று தனியாகக் கூறப்பட்டுள்ளது.

சங்க நூல்களில் சுரபுன்னை என்ற பெயர் அப்படியே கூறப்படவில்லை. பரிபாடலில் மட்டும்தான் வருகின்றது. அதுபோல் புன்னாகம் என்ற மரமும் சங்க நூல்களில் குறிப்பிடப்படவில்லை.

சுரபுன்னை, புன்னையும் நாகமும் போன்று இருத்தலால் புன்னாகம் என்று அம் மரம் அழைக்கப்பட்டது. இது காடுகளில் காணப்படும் CaloPhyllum tomentosa என்ற மரமாகவே இருக்கலாம்.

இந்த மரம் மிக உயரமாக வளரக் கூடியது. இந்த மரத்தை அராபியர் கப்பல்களில் பாய்மரமாகப் பயன்படுத்தினர். இந்த மரத்தின் வணிகப் பெயர் poon என்பதாகும். இச் சொல் தமிழ்ப்பெயர் என்பது குறிப்பிடத் தக்கது.

நாகமரத்தை இதன் அழகிற்காகவும் நறுமணப் பூவிற்காகவும் வீடுகளிலும் வளர்ப்பர். நாக மரத்தை Mesua Ferrea என்று அறிவியலில் அழைப்பர்.

# நொச்சி

'மயிலடிய இலைய மாக்குரல் நொச்சி
மனைநெடு மௌவலொடு ஊழ்முகை அவிழக்
காரெதிர்ந் தன்னார் காலை காதலர்'

நற்றிணை 15

'தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை ஆயமும் நொச்சியும் காண்தொறு' ,, 143

'அணியியற் குறுமகள் ஆடிய
அணியேர் நொச்சியுந் தெற்றியுங் கண்டே'

,, 184

'மனைமர நொச்சி மீமிசை மரச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்'

,, 246

'நொச்சி மாஅரும் பன்ன கண்ண
எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி'

,, 267

'மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்
கடியுடை வியன்நகர் காண்வரத் தோன்றத்'

,, 305

'மனையிள நொச்சி மௌவல் வான்முகைத்
துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்'
அகம். 21

'தாழ்வின் நொச்சி சூழ்வன வளரும்
மௌவல் மாச்சினை காட்டி' ,, 23

'மௌவலொடு மலர்ந்த மாக்குரல் நொச்சியும்'
,, 117

'தடவுநிலை நொச்சி வரிநீழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டி' ,, 165

'துனைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டியான் ஆகுக மன்னே' ,, 203

'தெற்றி யுலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்'
,, 259

'ஐதகல் அல்குல் தழையணிக் கூட்டும்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்' ,, 275

'மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய
முனையுழை யிருந்த அங்குடிச் சீறூர்' ,, 3?7

'நீரற வுறியா நிலமுதற் கலந்த
கருங்குரல் நொச்சி கண்ணார் குரூஉத்தழை'
புறநானூறு 271

'மணிதுணர்ந் தன்ன மாக்குரல் நொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த' புறம். 272

'மயிலடி யிலைய மாக்குரல் னொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே'

குறுந்தொகை 138

'கருங்காக்கை கவவு முனையின்
மனைநொச்சி நிழலாங்க
வீற்றியாமைதன் பார்ப்போம்பவும்'

பொருநராற்றுப்படை 184-6

'கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப்
பாடோர்க்கும் செவியொடு பைதலேன் யானாக'

கலித்தொகை 46 : 12-13

'கண்ணி கட்டிய கதிர அன்ன
ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி'

நற்றிணை 200

'மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிகள் ஆர்கை பார்முது குயவன்' ,, 293

'நொச்சி வேலித் தித்த னுறந்தை' அகம். 122

'அலவன்க ணேய்ப்ப வரும்பீன் றவிழ்ந்த
கருங்குர னொச்சிப் பசுந்தழை சூடி'

கார் நாற்பது 39

நொச்சி ஒரு மரமாகக் காணப்படும். குறுமரமாக வளரும். சங்க காலத்தில் வீட்டிற்கு வேலியாக இந்த மரத்தை வளர்த்தனர்.

மனைமர நொச்சி, மனையிள நொச்சி என்று அழைக்கப்பட்டுள்ளது. இதை மல்லிகையொடு சேர்த்து வளர்ப்பர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

நொச்சியின் பூ நீலமும் ஊதாவும் கலந்து (Bluish purple) காணப்படும். அதனால் மணிமலர் நொச்சி என்று கூறப்பட்டுள்ளது. மணிமருள் பூ, மணிக்குரல் நொச்சி என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

மணிதுணர்ந் தன்ன மாக்குரல் நொச்சி என்றும் கூறப் பட்டுள்ளது.

கருங்குரல் நொச்சி என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

நொச்சியின் சிறிய பூவை நண்டின் சிறிய கண்ணிற்கு ஒப்பிட்டுப் பாடியுள்ளனர். கண்ணியில் கட்டிய பூ போல் நொச்சியின் பூங்கொத்து இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. மயிலடியனைய இலையுடைய நொச்சி Viten Pulescens ஆகும்.

நொச்சியின் பூவை ஆடவரும் பெண்டிரும் சூடுவதுண்டு என்று கூறப்பட்டுள்ளது. நொச்சித்;தழையையும் பெண்டிர் அணிவர் என்று கூறப்பட்டுள்ளது.

நொச்சியினத்தில் மரம் போல வளரும் வகை உண்டு. மயிலடியன்ன மாகுரல் நொச்சி என்று கூறிய பாடலில் வரும் மயிலடி என்ற சொல்லாலேயே இந்த நொச்சிமரம் இக் காலத்தில் அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

# பயின்

சங்கநூல்களில் பயின் என்று ஒரு மரம் கூறப்பட்டுள்ளது.

'சிறுகாரோடன் பயினோடு சேர்த்திய
கற்போர் பிரியலம் என்ற சொற்றாம்'

—அகம். 1

'தொன்னசை காவாமை நன்னன் பறம்பிற்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினன் ஆகி மற்றது'

—அகம். 386

'இதையுங் கயிறு பிணையும் இரியச்
சிதையுங் கலத்தை பயினாற் திருத்தி'

—பரிபாடல் 10; 53-54

பயின் என்ற மரம் இப்போது மலைப்பகுதிகளில் பயினி என்றழைக்கப்படுகின்றது.

இதுஒருவகைப் பிசினைத் தரும் மரமாகும். கெட்டியான பிசினைத் தருவதால் கப்பலில் பாய்மரமும் கயிறும் பிரிந்த போதிலும் கட்டுகளைப் பிணைப்பதற்கு இந்தப் பயின் மரத்தின் பிசினைப் பயன்படுத்தினர். இந்தச் செய்தி பரிபாடலில் கூறப்பட்டுள்ளது.

பயின் மரத்தைப் பயினி என்று மலையாளத்தில் அழைப்பர். இதை Vateria Indica என் அறிவியலில் அழைக்கின்றனர்.

# புன்கு

சங்க நூல்களில் புன்கு என்ற மரம் கூறப்பட்டுள்ளது.

'தளிர்ப்புன்கின் தாழ்காவி'

—பொருநராற்றுப்படை - 196

'பொரிப்பூம் புன்கின் அழல் தகை ஒண்முறி
சுணங்கு அணி வனமுலை அவணங்குகொளத் திமிரி'

— நற்றிணை 9

'நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன'—குறுந். 53

'பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக் கொளாஅச்'

— குறுந்தொகை 341

எழில்தகை இளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே'

— ஐங்குறுநூறு 347

'பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்கும்'

— ஐங்குறுநூறு 368

'பெரிய தாண் இலை மன்ற; பொரிஎனப்
புன்கு அவிழ் அகன்துறைப் பொலிய ஒள்நுதல்'

— அகம். 116

'பொரிஉரு உறழப் புன்கு பூ உதிர' — கலி - 33

'பொரிசிதறி விட்டன்ன புன்கு'
— திணைமாலை நூற்றைம்பது - 64

புன்கு இக்காலத்தில் புங்கம் என்றழைக்கப்படுகிறது. புங்கின் தளிர் மென்மையாகவும் சிறிது சிவந்ததாகப் பளபளப்பாகவும் இருக்கும்.

சங்க கால மகளிர் புன்கின் தளிரை மார்களில் அப்பிக் கொண்டனர்.

புங்கின் பூ செந்நெல் பொரிபோல இருந்ததாகச் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. புங்கம் பூ வெண்மை நிறத்தில் சிறிது சிவப்பு நிறம் பரந்திருக்கும். அதனால் பொரிப்பூ என்ற ழைத்தனர்.

புன்கமரத்தை Soadnut tree என்று ஆங்கிலத்திலும் Sapindns emarginatus என்று அறிவியல் நூலிலும் அழைப்பர்.

# பெருமரம்

சங்க இலக்கியத்தில் பெருமரம் என்றொரு பெயர் சில பாட்டுகளில் காணப்படுகின்றது. பெருமரம் என்ற சொற் பெயர்க்குப் பொருளெழுதின உரையாசிரியர்கள் பெரு மரத்தை வெறும் மரமாகக்கொண்டே பொருளெழுதினர்.

சங்கப்புலவர்கள் கூறிய பெருமரம் ஒரு குறிப்பிட்ட மரத்தின் தனிப்பெயரென்று தெளிந்து கொள்ளாது உரை

யாசிரியர்கள் எழுதினர். பிற்காலத்தில் மரஞ் செடி கொடி களைப்பற்றிய அறிவு குறைந்ததால் பெருமரத்தைப் பெருந்த மரம் என்று பொதுப்பெயராகக் கொண்டனர்.

பெருமரம் என்ற சங்க கால வழக்கு சிறப்புப் பெயரா கவே வழங்கியது என்பதை உணர வேண்டும்.

அகநானூற்றில் அவ்வையார் மிக அழகாக ஓர் உவமை வாயிலாகப் பெருமரத்தை விளக்குகின்றார்.

> 'முளையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை
> அசைவுடை நெஞ்சத்து உயவுத்திரள் நீடி
> ஊரோர் எடுத்த அம்பல் அஞ்சினை
> ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பிப்
> புலவர் புகழ்ந்த நார்இல் பெருமரம்
> நிலவரை யெல்லாம் நிழற்றி
> அலர்அருப்பு ஊழ்ப்புவும் வாரா தோரே'
>
> —அகம். 273

ஊரார் கூறும் பழியான பெருமரமானது சிறிது விதை யிலிருந்து இளமுளையாகத் தோன்றிக் கொழுந்துவிட்டுப் பல கிளைகளாகப் பிரிந்து தளிர் பரப்பி நிலவரை யெல்லாம் நிழல் தரும்படி பெரிதாக வளர்ந்து 'அலரரும்பு' தோற்றியும் தலைவன் வரவில்லை என்று தலைவி சொல்வதாக மேற் காட்டிய பாடலில் பொருள் அமைந்துள்ளது.

பெருமரம் மலர்வதும் ஊரார் பழிச்சொல் அலராவதும் ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளது. பெருமரம் இப் பாடலில் உருவகமாக வந்துள்ளது. இந்த உருவகம், ஒப்புமை எப்படிப் பொருந்தும் என்று பார்க்கலாம். இப்பாட்டில் பெருமரத்தை வெறும் மரமாகக் கொண்டால் ஒப்புமை சிறப்படைய வில்லை.

பெருமரத்தை இன்றும் நாட்டுமக்களிடையே பேச்சு வழக்கில் வழங்கும் 'பெருமர' மாகக் கொண்டால் உவமை மூற்றிலும்பொருந்தும். சிறப்படையும். நாட்டு மக்களிடையே ஒரு குறிப்பிட்ட மரத்தின் பெயராகப் பெருமரம் என்ற சொற்பெயர் வழக்கு இன்றும் வழங்குகின்றது.

மிக உயரமாக, பெரிதாக வளர்வதால் இம் மரத்தைப் பெருமரம் என்றனர்.

இம் மரத்தைப் 'பெரு' என்றும் 'பெருக்கு' என்றும் வழங்குகின்றனர்.

அடிமரம் மிகவும் பெருத்துக் காணப்படும் 'பாப்பாரப் புளியன்' (Boabab] என்ற மரத்தைப் பெருக்கான், பெருக்கு என்றழைக்கின்றனர். இதைக் 'கோரக்கர் புளி' என்றும் அழைப்பர்.இது பிற்காலத்தில் வெளிநாட்டிலிருந்து கொண்டு வரப்பட்டு இன்று இந்தியாவில் வளருகின்றது. பெருவயி றுடைய இம்மரத்தைப் பெரு வயிறுடையோர் பார்ப்பனர் என்ற எண்ணத்தில் நாட்டு மக்கள் பார்ப்பாரப்புளியன் என்று நகைச்சுவையோடு அழைத்தனர்.

பெரிய எலியை பெருச்சாளி, பெருக்கான் என்பது போலப் பெரிய மரத்தைப் பெருமரம் என்று சங்க காலத் திலும் பெரு, பெருக்கு என்று நாட்டு மக்களிடையே தற் காலத்திலும் வழங்கி வருகின்றனர்.

மலையாளத்திலும் இப் பெருமரத்திற்குப் 'பெரு' என்ற பெயர் தனியாக வழங்குகின்றது. தெலுங்கில் 'பெத்தமானு' என்று பெருமரம் என்ற பொருளில் வழங்குகிறது. கன்னடத் திலும், பெருமரத்தைத் தனியாக 'ஹெம்', 'ஹெம்பேவு, என்று இன்றும் வழங்குகின்றனர் இப்பெயர்கள், 'வெம்' 'பெரும் வேம்பு' என்ற பெயர்கள் கன்னடமொழி ஒலி மரபுக்கேற்ப மாறின உருவங்களேயாகும்.

இந்தப் பெருமரத்தின் இலைகள் வேப்பமரத்தின் இலைகள்போலிருப்பதால் பெரிய வேப்பரம் என்ற பொருளில் கன்னடப்பெயரும் மற்றும் மராத்திப் பெயரும் ஏற்பட்டது பெருமான் பெம்மான் ஆவதுபோலப் பெரும் என்ற சொல் கன்னட மொழியில் 'பெம்' என்று நின்று பெருமரத்தைக் குறித்தது.

இப்பெயர்களுக்கெல்லாம் அடிச்சொல், வேர்ச்சொல் 'பெரு' என்பதே. தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளில் ஒரே பெயராகச் சிறிது ஒலி மாறினும் வழங்கும் ஒரே மரம், Ailanthes excelsa என்று செடி நூலார் குறிப்பிடும் மரமே யாகும்.

இதை இந்தியில் 'மகாருக்' என்றும், மராத்தியில் 'மகாநிம்பு' என்றும் கன்னடத்தில் தொட்டாமரா' என்றும் 'பெரு' என்ற அடைமொழிப்பொருள் கொடுத்து வழங்குகின்றனர்.

இந்த மரம் தென்னிந்தியாவில் நன்கு வளரும். மேற்குத் தொடர்ச்சி மலைகளில் காணப்படும் இம்மரங்கள் மிக உயரமாகவும், பெரிதாகவும் வளரும். உருண்டு திரண்டு இதன் அடி மரம் மிகவும் நீண்டு உயரமாகக் காணப்படும். இந்த மரத்தின் உயரத்தையும் உருவையும் கண்டே இதைப் பெருமரம் என்று கண்டுகொள்ளலாம்.

இந்த மரத்தின் மற்றொரு முக்கிய தன்மை இதன் பூவில் உள்ளது. அதையும் அவ்வையார் குறிப்பாகக் கூறியுள்ளார். இம்மரம் பூக்கும்போது பெரிய கொத்துகளாகப் பூக்கள் தோன்றும். பூங்கொத்துகள் மூக்கில் நுகர முடியாத கெடுநாற்றத்தை வீசும். இந்தப் பூவிலிருந்தும் இதன் கெடு நாற்றத்திலிருந்தும் இம்மரத்தைக் கண்டு கொள்ளலாம்.

(Ailanthes excelsa grows in to an enormous tree with clear, Cylindrical bole. Its large panicle of flowers gives off a foetid odour. Its wood is soft and is useless for structural work.)

இதன் காரணமாக இந்த மரத்தைப் 'பீநாறி' என்று அழைக்கின்றனர். தெலுங்கு மொழியில் 'பீவேப்புச் செப்பு' என்றும் வழங்குகின்றனர். இம்முறையாகக் கெடுநாற்றம் வீசும் வேறு மரங்களும் உள்ளன. ஆனால் மிக வுயரமாக வளர்ந்து நீண்ட மலர்க்கொத்துகளாகப் பூத்துக் கெடு நாற்றம் வீசும் மரம் இந்தப் பெருமரமே **(Ailanthes excelsa)** ஆகும்.

இதையே குறிப்பாக அவ்வையார் பெருமரம் நிலவரை யெல்லாம் நீண்டு வளர்ந்து அலரரும்பு தோன்றிற்று என்று கூறினார். இதன் பூக்கள் மிகவுயரத்தில் கண்டு கொள்ள முடியாத சிறிய பூக்களாகையால் எளிதில் காண முடியாது. ஆனால், இதன் நாற்றத்தால் பூத்திருப்பதை உணர்ந்து கொள்ளலாம்.

பழியெனும் நாணில்லாத பெருமரம் முளையெடுத்துக் கிளைவிட்டுத் தளிர் பரப்பி அலரரும்பு தோற்றி ஊரார்க்குக் காட்டிக் கொடுத்தது என்று அவ்வையார் கூறினார்.

பழி தூற்றும் இந்த அலர் மரம், புலவர்கள் புகழ்ந்து பாடும் நாணில்லாதது பெருமரம். 'நாணில் பெருமரம்' என்ற வரி, 'நாரில் பெருமரம்' என்று பாடமாற்றம் கொண்டுள்ளது.

நாரில் பெருமரம் என்ற பாடம் பொருத்தமின்று.

பெருமரம் கெட்டியான மரமன்று. மிக வுயரமாக வளர்ந்தாலும் உள்மரம் கெட்டியற்றது. இதுவும் சங்கப் பாடல்களில் குறிப்பிடப் பட்டுள்ளது.

நார், பால் உடைய மரங்கள் அலிமரமென்றும், அகக் காழ் உடைய மரங்கள் ஆண்மரங்கள் என்றும் திவாகரம் கூறுகின்றது.

நாரில் பெருமரம் என்று கொண்டால் கெட்டியான மரம் என்பதாகி விடும். இது கெட்டியற்ற மரமானதால் அது

தவறு. உருவகத்திற்கு 'நாணில் பெருமரம்' என்று கொள் வதே பொருத்தம்.

'கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வேர்அடிப்[1] போல
அருளிலேன் அம்ம அளியேன் யானே'
—நற்றிணை 289

'வாழை ஓங்கிய தாழ்கண் அசும்பில்
படுகடுங் களிற்றின் வருத்தம் சொலிய
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்'
—அகம். 8

'பெருமர வள்ளியிற் பிணிக்கும் என்னார்
சிறுபல் குன்றம் இறப்போர்'
—நற்றிணை 269

'பெருமரத்து இலைஇல் நெடுங்கோடு
வற்றல் பற்றவும்'
—புறம். 41

மேற்காட்டிய பாடல்களில் பெருமரத்தைப் பற்றிக் கூறி யுள்ளார். நற்றிணை 289 ஆம் பாடலில் பெருமரத்தின் கொள்ளி நின்று எரியாது, மிக விரைவில் எரிந்து கரியாவது போல கருணையின்றி இருப்பதாகத் தலைவி சொல்வதாகக் கூறுவதைக் காணலாம். பெருமரம் மெதுத்தன்மையுடைய உள்மரத்தையுடையதால் நின்று எரியாது, விரைவில் எரிந்து தீரும்.

அகநானூற்றுப் பாடலொன்றும் பெண் யானை பெரு மரத்தைப் பிடித்து ஆட்டிய பூசலைப் பற்றிக் கூறியுள்ளது. கெட்டியற்ற மரமாயிருப்பதால் (soft wood), பெரிய மரமா

1. ஓடியல் என்பது ஒரு பாடம்.

யினும் யானை பெரு மரத்தை முறுக்கியதாகக் கூறியது பொருத்தமே.

நற்றிணைப் பாடலொன்றும் பெருமரத்தைச் சுற்றி யேறிய வள்ளியைப்பற்றிக் கூறியுள்ளது.

பெருமரத்தைப்பற்றிச் சங்கப் பாடல்கள் கூறியுள்ள செய்திகள் செடி நூலார் கூறும் செய்திகளோடு ஒத்து வருவதால் பெருமரம் வெறும் மரமன்று, அது குறிப்பிட்டதொரு மரமென்று அறிய வேண்டும்.

பெருமரம் என்ற பெயரைப் பொதுப் பெயராகக் கொள்ளாமல் சிறப்புப் பெயராகக் கொள்ள வேண்டும். இத்தகைய சிறப்புப் பெயர்கள் 'பெரு' என்ற சொல்லடையோடு குறிப்பிட்டதொரு பொருளைக் குறித்துச் சங்க காலத்திலேயே வழங்கியதைக் காணலாம்.

பெருநாரை, பெருங்குருகு, பெரும்பயறு, பெருந்தேன், பெரும்பாம்பு, பெரும்புலி ஆகிய பெயர்கள் தமிழிலக்கியத்தில் சிறப்புப் பெயர்களாகவே வழங்குகின்றன.

மலையாள மொழியில் பெருமரம் ஒரு தனிமரத்தைக் குறித்து வழங்குவதைப் போலச் சிறுமரம் என்ற சொல்லும் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் குறித்து வழங்குகின்றது. வெள்ளிலோத்திரம் என்று ஐங்குறு நூறு குறிப்பிடும் மரமே சிறுமரமென்று அழைக்கப்படுகின்றது. 'லோத்ரா' என்ற மருந்து குழந்தைகளுக்காக இம்மரத்திலிருந்து செய்யப்படுகின்றன. இது குட்டையான மரமாதலால் 'சிறுமரம்' என்ற பெயர் சிறப்புப் பெயராகப், பெருமரத்திற்கு எதிராக மலையாளத்தில் வழங்குகின்றது.

பெருமரம், செடி நூலார் கூறும் Ailanthes excelsa என்பதில் சிறிதும் ஐயமில்லை. இலத்தீனிலும் 'excelsa' என்ற சொல் பெருமையைக் குறித்தே வழங்குவதை இது சார்பாக எண்ணிப் பார்த்தால், பெருமரம் என்று சங்க

காலத்தில் பெயர் வழங்கியதன் பொருத்தத்தை அறியலாம். மற்றும் ஆங்கிலத்திலும் இதன் பெருமையைக் குறித்தே 'Tree of heaven' என்று பெயரிட்டனர்.

சங்க இலக்கியத்தில் அலர் என்ற சொல் தலைவிக்கு ஏற்படும் பழிச் சொல்லைக் குறித்தும் பல பாடல்களில் பயில்கின்றது. அம்பலென்பது பெரும்போதாய்ச் சிறிது நிற்க அலருமென நிற்பது. அலரென்பது அப்பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற் போல நிற்கும் நிலைமை என்று உரையெழுதியுள்ளனர்.

அலர் என்பது நறுநாற்றமுடைய மலரைக் குறித்து வழங்கியதென்று கொண்டால், பழிச்சொல்லுக்கு உருவகமாக வருவது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆதலின் அலர் என்பது கெடுநாற்றமுடைய மலரைக் குறித்தே வழங்கியிருக்க வேண்டும். அதுவும் பெருமரமான 'நாணில் பெருமரத்'தின் மலரைக் குறித்தே முதலில் வழங்கி வந்து பின்னர் அதன் தொடர்பை மறந்துவிட்டனரென்று கொள்ள வேண்டும்.

சங்க இலக்கியத்தில் பழிச்சொல்லைக் குறிப்பிடும் அலர் என்ற சொல் நாணில் பெருமரத்தின் கெடுநாற்றமுடைய அரும்புக்கும் அலருக்கும் வழங்கியதை அவ்வையார் பாடலிலிருந்து நுண்ணிதின் உணர்ந்து கொள்ளலாம்.

பழிச்சொல் என்ற பொருளில் 'அலர்' என்ற சொல் 'அலார்' என்ற பேச்சுவழக்காகப் புதுவைப் பகுதியில் இன்றும் வழங்குகின்றது. வீண் புரளி, வீண்பழி பரப்புவதை 'அலார் ஆக' இருக்கிறது என்பர்.

திருவள்ளுவர் காதல் நோய்க்கு மாலை மலரும் மலரை ஒப்பிட்டுக் கூறினார். 'மலரினும் மெல்லிது காமம்' என்றார். இவ்விடங்களில் நறுமலர் என்று கொள்ள வேண்டும். ஆனால் அதே ஒப்புமையைப் பழிச்சொல்லுக்கும் கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை

தாதும் அல்லியும் வெளிப்பட நிற்பதைவிடக் கெடு நாற்றமடிக்கும்படி மலர்வதே அலர் தூற்றுவதற்குப் பொருத்தமாகும்.

# மயிலை

மயிலை என்றொரு பெயர் ஒரு மரத்தைக் குறித்துச் சங்க நூல்களில் புறநானூற்றில் மட்டும் வருகின்றது.

> 'கானக் காக்கை கலிச்சிற கேய்க்கும்
> மயிலைக் கண்ணிப் பெருந்தோள் குறுமகள்'
> —புறம். 342

கானக் காக்கைச் சிறகின் நிறத்தைப் போன்று மயிலைப் பூவால் செய்த கண்ணியின் நிறம் இருந்ததாக உவமை கூறப் பட்டுள்ளது.

புறநானூற்றுக்கு அடிக்குறிப்புரை எழுதிய உ. வே. சாமிநாதய்யர், மயிலை என்பதற்கு இருவாட்சி என்று பொருள் கூறியது பொருத்தமின்று. மிகப் பிற்காலத்தில் மயிலை என்பதற்கு இருவாட்சி என்ற பொருள் வழங்கியுள்ள தாகத் தெரிகின்றது.

'இருவாட்சிக்கு மயிலையு மனங்கமும் பேர்' என்று வரும் சூடாமணி நிகண்டு வரி குறிக்கும் இருவாட்சி என்பது ஒரு மல்லிகை விசேடமாகும். சூடாமணி நிகண்டுக்கு முந்திய சேந்தன் திவாகர நிகண்டில் இருவாட்சி மயிலை என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

பிற்காலத்தில் வழங்கிய இருவாட்சி என்ற பொருளைப் புறநானூற்றில் வழங்கிய பெயருக்குப் பொருளாகக் கூறியது பொருந்தாது.

கானக் காக்கை கருநீலமுடைய சிறகை உடையது. கானக் காக்கை அண்டங்காக்கையாகும். இந்த அண்டங் காக்கைக்குக் கருநீலமுடைய சிறகுண்டு என்று பறவை நூலார் கூறுவர். கானக் காக்கையின் கருநீலமுடைய சிறகு போன்று மயிலையின் பூங்கண்ணியின் நிறம் இருந்ததாகப் புறநானூறு கூறியுள்ளது.

மயிலை என்றொரு மரம் வீட்டு நொச்சியைப் போன்றே காடுகளில் காணப்படுகின்றது. வறண்ட இலையுதிர் காடு களில் காணப்படும் இக்காட்டு நொச்சியை 'மயிலா' என்று இன்றும் பேச்சு வழக்கில் அழைக்கின்றனர். மற்றும் மயிலை நொச்சியென்றும் அழைக்கின்றனர்.

இதன் பூ வெண்மையானது. ஆனால் இதழ்கள் ஓரத் தில் கருநீலம் பூசப்பட்டது போன்று காணப்படும். White tinged with blue or violet' என்று இதன் பூ செடி நூலில் விளக்கப்பட்டுள்ளது. இந்தக் கருநீலநிறம் (வயலெட் நிறம்) இருந்த பூவைய அண்டங் காக்கைச் சிறகின் கருநீல நிறத் திற்கு ஒப்பிட்டுப் புறநானூறு பொருத்தமாகக் கூறியுள்ளது. இந்த மயிலை மரத்தை 'Vitex altissima' என்று அறிவியலில் குறிப்பிடுவர்.

இம் மரம் தெலுங்கில் நெமிலி அடுகு என்று அழைக்கப் படும். நெமிலி என்ற பெயர் தெலுங்கில் மயிலைக் குறிக் கும். இந்த மரம் கன்னடத்தில் மய்ரோல் என்று அழைக்கப் படுகின்றது.

இதே இனமான வேறொரு காட்டு நொச்சி மரம் 'Vitex Pubescence' என்று அறிவியலில் குறிப்பிடப்படு கின்றது. இது ஆற்றோரங்களில் வளரும். இதைப் பேச்சுத் தமிழில் 'மயிலடி' என்று அழைப்பது கவனிக்கத் தக்கதாகும். இது மலையாளத்தில் 'ஆத்து மயிலை' என்றும் தெலுங்கில் நெளலி எறகு' என்றும் வழங்கும். மயிலடி என்ற பெயர் மற்றும் கன்னடத்தில் நெவலடி, நவுலடி என்றும் அழைக்கப் படுகின்றது. இம் மரம் மலையாளத்தில் 'மயிலடி' என்று அழக்கப்படுகின்றது.

சங்க நூல்களில் வீட்டு நொச்சியிலையைக் குறித்து வழங்கி யுள்ளதைக் காணலாம்.

'மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி'

—நற்றிணை 115

'மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி'

— குறுந்தொகை 138

சங்க நூல்களில் 'நொச்சிவேலி தித்தன் உறந்தை' என்று கூறப்பட்டு, வீட்டு வேலியாகவும் ஊர் வேலியாகவும் பயன் பட்டது. மயிலடி என்ற வழக்கு இக் காலத்தில் பாமர மக்கள் வாயில் காட்டு நொச்சிக்குப் பெயராக வழங்கி வருவது வியப்பைத் தருகின்றது.

மற்றும் தமிழில் வழங்கும் மயிலையைக் கன்னடத்தில் நெவலடி, நவுலடி என்று அழைப்பதுவும் கூர்ந்த கவனிக்கத் தக்கதாகும். கன்னடப் பெயர்கள் மயிலடி என்ற பொருளையே தருவதும் இதே மரம் மலையாளத்தில் மயிலடி என்றழைக்கப்படுவதும் இது சார்பாக எண்ணிப் பார்க்க வேண்டும். சங்க நூல் மரபில் இப்பெயர்கள் பிற திராவிட மொழிகளில் வழங்குவது குறிப்பிடத்தக்கதாகும்.

மயிலடி இலைய என்பதையே சென்னைப் பல்கலைக் கழக அகராதி 'Peacock's foot tree' என்று மொழி பெயர்த்தது. மயிலடி என்பது வீட்டு நொச்சியை விட காட்டு நொச்சியின் இலைக்கே பொருத்தமாக இருப்பதை நேரில் கண்டோர் புரிந்து கொள்வர். வீட்டு நொச்சியை அறிவியலில் 'Vitex Nogundo' என்றழைப்பர். டாக்டர் பர்ரோ, டாக்டர் எமனோ ஆகிய அறிஞர்கள் வெளியிட்ட திராவிட வேர்ச் சொல் அகராதியில் (Dravidian etymological dictionary) மயிலை என்ற சொல் விடுபட்டிருப்பதன் காரணம் தெரியவில்லை. நிகண்டுகளிலும் சதுரகராதி போன்ற அகராதிகளிலும் மயிலை ஒருவகை மரம் என்பது கூறப்படவில்லை.

# மருதம்

'குறுகிலை மருதம் விரிபூரி கோங்கம்' குறிஞ்சிப்-73

'காரைசேர் மருதம் ஏறி' ஐங்குறு.-74

'உளைப்பு மருதத்துக் கிளைக் குருகு இருக்கும்' ... -7

'துறைநணி மருதமேறித் தெறுமார்' பதிற்று.-27:6

'அரிக லவித்துப் பல்பூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று' 30:15-16

'அறல்அவிர் வார்மணல் அகல்யாற்று அடைகரைத்
துறைஅணி மருதமொடு இகல் கொள ஓங்கி' அகம்.-97

'துறைநணி மருதத்து இறுக்கும் ஊரொடு' புறம்.-344

'பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்டு
உளைப்ப மருதின் ஒள்ளிணர் அட்டி' —திருமுரு. -27-28

'நறுங்குறடு ரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கில்' ,, 35 ,, 34

'முடக்காஞ்சிச் செம்மருதின' பெருநரா. 189

'பாம்புறை மருதின் ஓங்கு சினை நீழல்' பெரும்பா.232

'நாள்தொழில் வருத்தம் வீட் சேட்சினை
இருள்புனை மருதின் இன்னிழல் வதியும்'
நற்றிணை-330

'கழனி மருதின் சென்னி சேக்கும்
மாநீர்ப் பொய்கை யாணர் ஊர' ஐங்குறு. 70

'ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்
துறையணிந் தன்றவர ஊரே யிறையிறந்' குறுந். 50

'பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த' குறுந். 258

'வருபுனல் வையை வார்மணல் அகன்றுறைத்
திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்' அகம். 36

'பல்வேல் மத்தி கழாஅர் முன்துறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்' ,, 226

'இறாஅல் அருந்திய சிறு சிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை ஊர' ,, 286

'மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனி கழாஅர் முன்றுறை' ,, 376

'வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்' புறம். 52

'ஒலிதெங்கி னிமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கை' பதிற்றுப் 13 : 7–8

'மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணல்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு'
23 : 18-19

'பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
தேங்கொண் மருதின் பூஞ்சினை முனையிற்' புறம். 351

'மருத மரனிழல் எருதொடு வதியும்' அகம். 37

'வருபுனல் வையை மருதோங்கு முன்றுறை'
சிலப்பு. 14:72

'மருத வேலியின் மாண்புறத் தோன்றும'
சிலப்பு. 6 : 149

'மருதம் சான்ற மருதத் தண்பனை'
சிறுபாணாற்றுப்படை 186

'பழனப் பலபுள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்'
நற்றிணை 350

'உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து' புறம். 243

'முடமுதிர் மருதத்துப் பெருந்துறை' ஐங்குறு. 75

'மருதொடு காஞ்சி யமர்ந்த நிழலை'
— திணைமாலை நூற்றைம்பது. 139

## தவறான கருத்து

சங்க நூல்களில் கூறப்பட்ட மருத மரதம் இப்பொழுதுள்ள ஆசிரியர்களுக்கும் அறிஞர்களுக்கும் தெரியவில்லை.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் மருதம் என்பதற்கு (Terminalia Arjuna) என்ற மரத்தைக் கூறியுள்ளனர்

நிகண்டுகளில் அருச்சுன மரத்தையே பொருளாகக் கூறியுள்ளனர். இதை அப்படியே எடுத்துக் கொண்டு பல்கலைக்கழக அகராதி அருச்சுனம் என்று பொருள் கூறியுள்ளது.

இந்தத் தவறான பொருளைப் பின்பற்றியே டாக்டர் எமனோ, டாக்டர் பர்ரோ என்ற வெளிநாட்டு அறிஞர்கள் தாங்கள் எழுதிய திராவிட மொழிகள் மூலச்சொல் அகராதியில் (Dravidian Etymological dictionary) அருச்சுன மரம் என்று பொருள் எழுதினர்.

நான் எழுதிய 'சங்க இலக்கியத்தில் செடி நூல் விளக்கம்' என்ற நூலில், சங்க நூல்களில் கூறப்பட்ட மருதம் எதுவென்று முதல் முதலாக அறுதியிட்டுக் கூறியும், டாக்டர் சுவலெபில், டாக்டர் மார் முதலிய திராவிட மொழியியல் அறிஞர்கள், தவறாக மருதத்தை அருச்சுனம் என்றே எழுதியுள்ளனர்.

அருச்சுன மரத்தை இக்காலத்தில் பாமர மக்கள் கரு மருது, வெள்ளை மருது, கலிமருது என்றழைக்கின்றனர்.

இதை அடிப்படையாகக் கொண்டே சென்னைப் பல்கலைக் கழக அகராதி, மருதத்திற்கு அருச்சுனம் என்று பொருள் கூறியுள்ளது. ஆனால், மணிமருது, பூமருது என்று தமிழ் நாட்டில் அருகி வழங்கும் மருதே சங்க இலக்கிய மரம் என்பதை அவர்கள் உணரவில்லை.

கருமருது, வெள்ளை மருது மரங்கள் மரப்பலகைக் காகவே பெரிதும் பயன்பட்டு வருகின்றன.

அருச்சுன மரத்தின் பூக்கள் அழகற்றவை. பசுமை கலந்த வெண்மையான மிகச் சிறுகிய பூக்களை உடையது.

ஆனால், சங்கநூல்களில் கூறப்பட்ட மருதம், சிவந்த பூக்களை உடையதாகக் கூறப்பட்டுள்ளது. முடக்காஞ்சி செம்மருதின் என்று பொருநராற்றுப்படையில் கூறப் பட்டுள்ளது.

'செவ்வி மருதின் செம்மலையாடு தாய்த்துறை பணிந் தன்ற ஊரே' என்று வரும் குறுந்தொகைப் பாட்டில், மருதின் சிவந்த பூக்கள் உதிர்ந்து கீழே பரவிக் கிடந்து, நீர்த்துறையை அழகு செய்ததாகக் கூறப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

திருமுருகாற்றுப் படையிலும் இளஞ்செந்நிறமூட்ட சந்தனக் குழம்ப மருதலேர்கொத்தை ஒத்து இருந்ததாகக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

செடி நூலிலும் (Botany) மருதின் பூ ஒருவகைச் சிவப்பு நிறம் (mauve) உடையதாகக் கூறியிருப்பதையும் நோக்க வேண்டும்.

மருதின் பூவின் புற இதழ் கருப்பாக இருக்குமென்று 'கருந்தகட்டு உளைப்பூ' என்று திருமுருகாற்றுப்படை கூறி யுள்ளது. கருந்தகட்டு என்று சொல்லியதைக் குறித்து செடி

நூலிலும் நீலங்கலந்த பச்சை நிறமாக இருக்குமென்று கூறப்பட்டுள்ளது.

'உளைப்பூ' என்று கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். ஐங்குறு நூற்றிலும் 'உளைப்பூ மருதத்து' என்று கூறப் பட்டுள்ளது.

உளைப்பூ என்பதற்கு, மேலில் துய்யினையுடைய பூ என்பது பொருளாகும்.

சங்க நூல்களில் மருதத்திற்கு சொல்லியுள்ள சிவந்த பூக்களும் துய்யினையுடைப் பூக்களும் அர்ச்சுன மரத்திற்கு இல்லாததால், சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள மருதம் இதுவன்று.

மருதமரம் நீர் நிலைகள், பொய்கை, கழனி, ஆறுகட்கு அருகே வளரும் மரமாகும். செடி நூலிலும் ஆற்றருகே இயற்கையாகப் பெரிதும் காணப்படும் என்று (Chiefly along river banks) சொல்லப்பட்டுள்ளது.

'மருதம் துறையுரத் தாழ்ந்தும்' என்று புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது. மருதத்துப் பெருந்துறை என்று ஐங்குறு நூற்றில் இரண்டு பாடல்களில் வருகின்றது.

திரு என்றால் அழகு, பெருமை, மங்களம் என்ற பொருள்களைத் தாங்கியுள்ள சொல்லை, அடைமொழியாக வழங்கியிருப்பதிலிருந்து சங்ககாலத் தமிழரிடையே எந்த அளவு போற்றப்பட்டது என்பது தெரிகின்றது.

நாயன்மார்களும் தெய்வங்களுக்கு திருவென்ற சொல்லை அடைமொழியாக முதலில் கூறியதை மருத மரத்திற் சேர்த்து சங்க காலத்தில் அழைத்தனர்; அக் காலத்தில் மருத மரத்தை எவ்வளவு போற்றினர் என்பது தெரிகின்றது.

மருதமரத்தைத் தொடர்புபடுத்தியே பொய்கையும் கழனிகளும், பழனங்களும், ஆற்றுத்துறைகளும் கருதப்பட்ட காரணத்தினாலேயே அந்த நிலம் மருதம் என்றழைக்கப் பட்டது.

ஆற்றங்கரையருகில் தோன்றிய நாகரிகத்தை ஆற்றின் துறையருகே மிகுதியும் காணப்பட்ட அழகிய பூவையுடைய மரத்தின் பெயரால் அழைத்தது. பண்டைத் தமிழரின் நுண்ணிய அறிவையும் அழகுணர்ச்சியையும் (Aesthetic sebse) காட்டுகிறது.

எம்.எஸ். ரண்டவா (m. s. Randaw I.C.S.) என்ற சிறந்த அறிஞர், ஒரு நாகரிக நகரத்தை உருவாக்கும் போது அழகுக்கு வளர்த்து வைக்கப்படும் நகரங்களில் Town Planning)முக்கிய மரமாக மருதத்தைக் கூறியுள்ளார்.

அதுபோலவே, ஆற்றந்துறைகளை அணி செய்ய சங்க காலத்தமிழர் மருதமரத்தைப் போற்றினர் என்று தெளிவாகின்றது.

'நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரி' அகம். 226

'.....................................காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த'
குறுந்தொகை 258

மலிபெருந்துறையில் காஞ்சி மரத்தொடு இருந்ததாகப் பதிற்றுப்பத்துப் பாடல் கூறியுள்ளது.

உயர் சினை மருதந்துறை என்று புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது. திருமருத முன்துறை என்று கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது.

திருமருதோங்கிய வருபுனம் வையை வார்மணல் அகன் துறை என்று அகநானூறு கூறியுள்ளது. வையை ஆற்றின் அருகே இருந்ததாகக் கூறப்பட்டதுபோல் கழார் முன்றுறையிலும் இருந்ததாக அகநானூறு கூறியுள்ளது.

'அறலவிர் வரர் மணல் அகலியாற் றடை கரைத் துறை யணி மருது தொகை கொள வோங்கி' என்று அகநானூறு கூறியுள்ளது. மருதம் ஆற்றந்துறைகளில் இருப்பதாகப் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. துறையை அணிசெய்ய மருது தொகை கொள் இருந்ததாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். அதனால் சங்ககாலத்தில் ஆற்றின் துறைகளில் தொகுதியாக நிறைய இருந்தது கூறப்பட்டுள்ளது.

'வருபுனல் வையை மருதோங்கு முன்துறை' என்று கலித்தொகை கூறியுள்ளது.

இதுகாறும் கூறியதிலிருந்து மருதமரம் ஆற்றுத்துறை களில் மிகுதியாகக் காணப்பட்டது. என்று தெரிகின்றது. இயற்கையாகவும் செயற்கையாகவும் மருதத்தை ஆற்றுத் துறைகளில் வளர்த்தனர் என்று தெரிகின்றது'

திருமருத முன்துறை திருமருத நீர்ப்பூந்துறை என்று பாடல்களில் கூறப்பட்டது கவனிக்கத்தக்கது.

மருதம் ஆற்றுத்துறைகளை அணிசெய்ததால் அதன் சிறப்புக் கருதி திரு என்ற அடைமொழியால் திருமருதம் என்றழைக்கப்பட்டது.

திரு என்ற அடைமொழியுடன் சங்க நூல்களில் மருதத்தை தவிர வேறு எந்த மரங்களும் அழைக்கப்படாதது குறிப்பிடத் தக்கது.

'வருபுனல் வைகை வார்மணல் அன்றுறைத்
திருமருதோங்கி விரிமலர் காவின்' அகம். 66

'வருபுனல் வையை அருதொடு முன்றுறை'
சிலப்பதிகாரம் 46

காவிரிக்கரையிலும் வையைக் கரையிலும் மருதமரம் இருந்ததாகக்கூறப்பட்டுள்ளது. வையைக் கருகில் திருமருத முன்றுறை இருந்ததைப் பரிபாடல் கூறியுள்ளது.

ஆற்றோரங்களில்தான் நகர நாகரிகம் தோன்றியுள் ளதை அறிஞர்கள் கூறியுள்ளனர். வையைக் கரையில்

மதுரை தோன்றியது காவிரிக்கரையில் பல நகரங்கள் தோன்றின.

காஞ்சி, வஞ்சி என்ற மரங்களின் பெயரால் சங்ககாலத் திலேயே நகரங்கள் தோன்றின. இந்த இரண்டு மரங்களும் ஆற்றருகே, நீர்நிலை அருகிலே காணப்படும்.

மதுரை என்ற நகரப்பெயரே பண்டைக்காலத்தில் மருதை என்றிருந்திருக்கவேண்டும். வைகை யாற்றின் கரையில் நிறைய இருந்த மருதமரத்தின் பெயரால் வழங்கி யிருக்க வேண்டும். இக்காலத்திலும் சில பாமரமக்கள் மது ரையை மருதை என்று அழைப்பதைக் காணலாம்

மதுரை என்ற பெயர் வடநாட்டு நகரமான மதுராவிலி ருந்து வந்தது என்பது நம்பத்தகாததாகும்.

மதுரம் என்ற வடசொல்லிலிருந்து வந்திருக்கும் என்பது தவறு.

மருதின் அடிமரம் வெண்மையாகக் காணப்படும். இதன் தோற்றம் நீண்டு உயரமாகவும் கண்ணுக்கு இனியதாகவும் இருக்கும். இதையே 'நெடுவெண்மருதொடு வஞ்சிசாஅய்' என்று அகநானூறு (226)கூறியுள்ளது. செடிநூலிலும் (Lagerstroemia flos - regina) என்று சங்க நூலில் கூறியதுபோல சொல்லப்பட்டுள்ளது.

காவிரியில் மருதத்துறைகள் பல இருந்ததாகத் தெரிகின் றது. தேவாரத்தில் கூறப்படும் இடைமருது பிற்காலத்தில் மத்யார்ஜுனம் என்று தவறாகக் கூறப்பட்டது.

தென்தமிழ்நாட்டின் தெற்கெல்லையாக மருதயாறு கூறப்பட்டுள்ளது.

மருதத்தின் சிறப்பைக் கருதி, மாங்குடி மருதன் மருத னிள நாகனார், மருதங்கிழார் என்ற பெயருடன் சங்கப் புலவர்களும் இருந்தனர்.

மருதமரத்தை இப்பொழுது காண்பதே அரியதாயிருக்கிறது. மருத மரங்கள் வெட்டப்பட்டு அழிக்கப்பட்டதால் காண்பதற்கே அரிதாகிவிட்டது. மனிதரின் அழகுணர்ச்சி குன்றியதால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிறைய இருந்த மருதமரம் அழிக்கப்பட்டுவிட்டது.

மருத மரம் செடிநூலில் Lagerstroemia Flos regina என்றழைக்கப்படும்.

அரசிக்கு உகந்த பூ என்பதையே Flos. regina என்ற பெயர் குறிக்கும். ஆங்கிலத்தில் அரசியின்பூ என்ற பொருளில் Queens flower என்றழைக்கப்படுகின்றது.

மேலும், இந்தியாவின் பெருமை என்ற பொருளில் Pride of India என்று ஆங்கிலத்தில் அழைப்பர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன்பே தமிழர் நாகரிகத்தின் சிறப்புப் பூவை 'இந்தியாவின் பெருமை' என்று இக்காலம் அழைப்பது வியப்பைத் தருகின்றது.

சிங்களத்தில் மருது என்றழைக்கின்றனர்.

மலையாளத்தில் டெம்பூ, கடம்பூ என்றழைக்கின்றனர் மணிமருது என்றும் மலையாளத்தில் வழங்கும்.

தமிழகத்தில் சிலவிடங்களில் கடலி, பூமருது என்று வழங்குகின்றனர்.

# முருங்கை

'சுரம் புல்லென்ற ஆற்ற; அலங்குசினை
நார்இல் முருங்கை நவிரல் வான்பூச்
சூரல் கடுவளி எடுப்ப ஆருற்று
உடைதிரைப் பிதிர்வின் பொங்கி, முன்
கடல்போல் தோன்றல-காடுஇறந் தோரே' — அகம். 1

'கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய
நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்
நீர்அற வறந்த நிரம்பா நீள்இடை — ,, ,, 53

'பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று
உருப்புஅவிர்பு உளரிய சுழன்றுவரு கோடைப்
புன்கால் முருங்கை ஊழ்கழிப் பல்மலர்
தண்கார் ஆலியில் தாவன உதிரும்' — ,, 101

'ஊர்எழுந்து உலறிய பீஎழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங் கை யானை' — ,, 167

'கள்ளிசார் காரோடை நாரில்பூ நீள் முருங்கை'
—திணைமாலை நூற்றைம்பது-91

சங்க நூல்களில் முருங்கைமரம் கூறப்பட்டுள்ளது. பாலையிலேயே கூறப்பட்டுள்ளது.

நாரில்லாத முருங்கை என்று கூறப்பட்டுள்ளது. முருங்கைக்கு நாரில்லை.

முருங்கைப் பூ வெண்மையென்றும் அது காற்றில் அடித்துச் சிதறுவது, கடுங்காற்றால் கடல்திரையின் துளிகளைப் போல் இருந்ததென்றுங் கூறப்பட்டுள்ளது. மேலும் முருங்கையின் வெண்மையான பூ உதிர்தலை ஆலங்கட்டி விழுவதைப் போலிருந்ததாகக் கூறியுள்ளனர்.

இந்த முருங்கைமரம் நீரில்லாத சுரத்திலும் முதுபாழிலும் வளர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள முருங்கை, தற்போது வீட்டில் வளர்க்கும் முருங்கை மரமன்று. காட்டில் இயற்கையில் வாழும் முருங்கையாகும்.

சங்க நூல்களில் முருங்கையின்இலையைக் கீரையாகவோ காய்களை உணவாகவோ உட்கொண்டது கூறப்படவில்லை. மிகப் பிற்கால நூல்களில் கூட முருங்கைக்காய் உணவாகக் கூறப்படாதது வியப்பைத் தருகிறது.

காட்டு முருங்கையை Maringa contonensis என்று செடி நூலில் அழைப்பர். இதைப் பேச்சு வழக்கில் காட்டு முருங்கை என்று இப்பொழுது அழைப்பர்.

முருங்கை என்ற பெயர் இதன் கிளை எளிதில் முரியும் தன்மையால், முருங்கும் தன்மையால் பெற்றது. இதைச் சிங்களப் பெயர் என்று கருதுவது தவறு.

# மூங்கில்

சங்க நூல்களில் ஐந்து வகை முக்கிய மூங்கில்கள் கூறப் பட்டுள்ளன.[1] அவை மூங்கில், பெருவெதிர், வேய், அமை, காம்பு ஆகியவையாகும்.

பொதுவாக இவை எல்லாவற்றிற்கும் மூங்கில் என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியிருப்பினும் அறிவியலறி வோடு ஆராயுங்கால், இவை மூங்கிலின் வகைகள் என்பது தெளிவாகின்றது.

இவைகளைப் பிரித்து உய்த்தறிய மலையாளம், தெலுங்கு முதலிய திராவிட மொழிகளில் இப்பொழுது வழங்கும் பெயர்கள் உதவுகின்றன.

மூங்கில் என்ற பெயர் பொதுப் பெயராக வழங்கினும், சங்க காலத்தில் மூங்கில் என்ற பெயர் ஒரு குறிப்பிட்ட மூங்கில் வகையினையே குறிப்பிட்டு வழங்கியுள்ளது.

'ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி,
கன்று,பசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு புஉட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை' —அகம். 85

---

1 ஆசியாவில் 50 மூங்கில்வகைகள் உள. மூங்கில் 30 ஆண்டுகளுக்குப் பிறகே பூக்கும்; அதுவும் ஒரு முறை தான். வேரின் அடிப் பாகத்திலிருந்தே இனப்பெருக்கம் நடக்கிறது.

'.................... உயர்மிசை
மூங்கில் இளமுளை திரங்கக், காம்பின்
கழைநரல் வியல்அகம் வெம்ப, மழை மறந்து' அகம்.241

' முளைவளர் முதல மூங்கின் முருக்கிக்
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை' —,, 332

' முளை அணி மூங்கிலின் கிளையொடு பொலிந்த
பெரும்பெயர் எந்தை அருங் கடி நீவி' —,, 268

' வேங்கை தாய ஓங்குமறை அடுக்கத்து
ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்கும் சென்னி' —நற்றிணை 28

' மூங்கில் அம்கழைத் தூங்க, ஒற்றும்' —,, 366

' கால் முளை மூங்கில் கவர்கிளை போல
உய்தல் யாவது நின் உடற்றி யோரே'
—பதிற்றுப்பத்து 84-12

' ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்

பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே'
—குறுந்தொகை 179

மூங்கில் என்ற பெயர் பொதுப்பெயராக எல்லா மூங்கில்களுக்கும் வழங்கினாலும், சிறப்பாக ஒருவகை மூங்கிலுக்குச் சங்க நூல்களில் வழங்கியுள்ளது. இந்த மூங்கில் பரவலாகக்குன்றுகளில் காணப்படும். இலையுதிர் காடுகளில் (Deciduous Forests) காணப்படும். வேங்கடமலையில் இருந்த மூங்கிலைப்பற்றி அகநானூறு (85) கூறியுள்ளது.

இந்த மூங்கில் கூட்டமாக வறட்சியான காடுகளில் 3000 மற்றும் 4000 அடிவரை காணப்படும். இந்த மூங்கில்

தான் கடும் வறட்சியைத் தாங்கக்கூடியது. இந்த மூங்கிலைக் கல் மூங்கில் என்று பாமர மக்கள் அழைப்பர். இந்த மூங்கிலை அறிவியலில் (Dendro calamus strictus) என்று அழைப்பர்.

இந்த மூங்கில்தான் தூண்களாகவும் வீடுகளில் கழிகளாகவும் ஈட்டி போலவும் பயன்படுகிறது. மனிதனுக்கு மிகுதியும் இம் மூங்கில் பயன்படுவதால் எல்லா மூங்கில் வகைகளும் இதன் பெயரால் அழைக்கப்படுகின்றன.

சங்க நூல்களில் இருவெதிர் என்று ஒருவகை மூங்கில் கூறப்படுகின்றது.

'செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்'

—குறுந்தொகை 385

'அருங்கடி மாமலை தழீஇ யொருசார்
இருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப'

—மதுரைக்காஞ்சி 301-302

'இரு வெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லென'

—மலைபடுகடாம் 207

'இருவெதிர் ஈர்ங்கழை ஏறிச் சிறுகோல்'

—ஐங்குறுநூறு 280

'வழுவப் பிண்டம் நாப்பண் ஏமுற்று
இருவெதிர் ஈன்ற ஏற்றிலைக் கொழுமுளை

சூல்முதிர் மடப்பிடி நாள்மேயல் ஆரும்'—நற்றிணை 116

இந்த மூங்கிலின் அரிசியை அண்மைக் காலத்தில் 'தோரை' என்றழைத்தனர். இதை அரிசி போல் உண்பர். மூங்கில் வகைகளில் மிகப் பெரியதாகக் காணப்படுவது இருவெதிர் என்ற பெரு மூங்கில் ஆகும். இந்த மூங்கில் நீலகிரி முதலிய இடங்களிலுள்ள காடுகளிலும் மேற்குத்

தொடர்ச்சி மலைக் காடுகளிலும் காணப்படும். இது மிகுந்த முள்ளுடையது.

மூங்கில் தண்டுகள் ஓட்டையாக இருக்கும். இந்து ஏழு அங்குலம் வரை விட்டம் இருக்கும். இந்த மூங்கிலின் கணுக் களில் கூரிய முட்கள் உண்டு. கூட்டம் கூட்டமாக மலைக்காடு களில் காணப்படும்.

இந்த மூங்கில் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும். பூக்கள் மிகப்பெரும் கொத்தில் காணப் படும். இந்த மூங்கிலின் கணுக்களில் ஒரு வெண்மையான கல் போன்ற கசிவுப் பொருள் அரிதாக அகப்படுகின்றது. இதை மூங்கிலில் தோன்றும் முத்து என்றனர். இந்த மூங்கில் பூக்கும் காலத்தில் மூங்கில் நெல் நிறைந்து காணப்படும். இந்த நெல்லைத் தின்ற எலிகள் ஏராளமாகப் பெருகும்.

இந்த மூங்கில் முளையில் நஞ்சு உண்டு. இந்த மூங்கிலைத் தின்ற சூலுள்ள.யானையின் கருப்பம் நழுவினதாக நற்றிணை (166) கூறியது அரிய உண்மைச் செய்தியாகும். வெதிரில் உழக்கு செய்வதைக் கலித்தொகை (69) கூறியுள்ளது.

பெருவெதிரை பெருமூங்கில், பெருவரை மூங்கில் என் றழைத் துள்ளனர். கன்னடத்தில் Hebbidru(பெருவெதிரு), தெலுங்கில் வெதுரு, முள்ளு வெதுரு என்றுமழைப்பர். இதை அறிவியலில் Bambusa Arundinaesea என்றழைப்பர்.

சங்க நூல்களில் முந்தூழ் என்றதொரு மூங்கில் குறிப் பிடப் பட்டுள்ளது.

'பாம்புமிழ் மணியிற் றோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே'

—குறுந்தொகை 239

'கடுஞ்சூல் மடப்பிடி நடுங்குஞ் சாரல்,
தேம்பிழி நறவின் குறவர் முன்றில்,
முந்தூழ் ஆய்மலர் உதிரக், காந்தள்'

—அகம். 78

முந்தூழ் என்ற வகை மூங்கில் சங்க நூல்களில் கூறப்பட்டுள் ளது. இந்த மூங்கிலும் ஒருவகைப் பெருமூங்கிலாகும். பெரு மூங்கில் தெலுங்கு மொழியில் 'முந்தல வெதுரு' என்றழைக் கப்பட்டுள்ளது. தெலுங்குப் பெயர் 'முந்தாழ் வெதிர்' என் பதன் மாற்றமாகும். முந்தூழ் என்பது மூங்கிலின் மற்றொரு பெயராகவும் கொள்ளலாம். நிகண்டுகளில் மூங்கிலின் பெயராக முந்தூழ் கூறப்பட்டுள்ளது. முந்தூழ் என்ற மூங்கில் குறிஞ்சிப் பாட்டில் உந்தூழ் என்றழைக்கப் பட்டுள்ளதைக் காணலாம்.

'உரிதுநா றவிழ்ந்தொத் துந்தூழ் கூவிளம்'

—குறிஞ்சிப்பாட்டு 65

இவ் வரிக்கு நச்சினார்க்கினியர் 'தமக்கு உரித்தாக நாறும் விரிந்த கொத்தினையுடைய பெருமூங்கிற்பூ' என்று பொருள் கூறியுள்ளார். உந்தூழ் என்பது தவறான பாடமாகத் தெரி கின்றது. குறுந்தொகையும் அகநானூறும் நிகண்டுகளும் முந்தூழ் என்று கூறும்போது குறிஞ்சிப்பாட்டில் மட்டும் உந்தூழ் என்று கூறியது தவறாக வந்த தாகும். உ. வே. சாமிநாதய்யர் 'தேமா என்பது முதல் உந்தூழ்,' என்பதிரு தியாகவுள்ள வரிகள் தருமபுரவாதீன மடத்திலிருந்து கிடைத்த ஒரு பழைய ஏட்டுப் புத்தகத்தில் மட்டும் இருந்தன' என்று எழுதியிருப்பதால் உந்தூழ் என்ற பெயரும் இவ் வரிகளும் இடைச் செருகலாக இருக்கலாம். முந்தூழ் என்பது பொதுவாக மூங்கில் என்றழைக்கப்படுகின்றதெனக் கருதலாம். பல ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் மூங்கிலாக இருக்காலம்.

சங்கநூல்களில் பல பாடல்களில் அமை என்ற மூங்கில் வகை குறிக்கப்பட்டுள்ளது.

'கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட்தேறல்'

—திருமுருகாற்றுப்படை 194 - 195

'திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்'

—மலைபடுகடாம் 522

'பெருமலை
வாங்குஅமைப் பழுனிய நறவுஉண்டு
வேங்கை முன்றில் குரவையுங்கண்டே'—நற்றிணை 276

'குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து'

—புறப்பாட்டு 129

'ஆடுஅமைப் பணைத்தோள் அரிமயிர் முன்கை'
பொருநராற்றுப்படை 32

'வணைபுனை யெழின்முலை வாங்கமைத் திரள்தோள்
மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்'

—மலைபடு 57 - 58

'திருந்தமை விளைந்த தேக்கள் தேறல்'

—மலைபடுகடாம் 522

'ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்
பேரமர்க் கண்ணியிருந்த ஊரே' —குறுந்தொகை 131

'செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்'

—குறுந்.385

'வாங்குஅமைக் கண் இடை கடுப்ப, யாய்'

—அகம். 18

'வெல்போர் வானவன் கொல்லி மீமிசை
நுணங்குஅமை புரையும் வணங்குஇறைப்
பணைத்தோள்' ,, 33

'அலங்குகழை நரலத் தாக்கி, விலங்குஎழுந்து,
கடுவளி உருத்திய கொடிவிடு கூர்எரி

விடர்முகை அடுக்கம் பாய்தலின், உடன்இயைந்து
அமைக்கண் விடுநொடி கணக் கலை அகற்றும்'
அகம். 47

'தோடுஅமை அரிச்சிலம்பு ஒலிப்ப, அவள்
ஆடுவழி ஆடுவழி, அகலேன் மன்னே' ,, 49

ஆடுஅமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை அவ்வளி குழலிசை ஆகப்
பாடுஇன் அருவிப் பனிநீர் இன்இசை' ,, 82

'தாழ்இருங் கூந்தல்நம் காதலி
நீள்அமை வனப்பின் தோளுமார் அணைந்தே'
,, 87

'அரிமதர் மழைக்கண், அமைபுரை பணைத்தோள்,
'அணங்குசால், அரிவையைக் காண்குவம் ,, 114

'தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேய்அமைக் கண்இடை புரைஇ' ,, 152

'மழைகால் அற்சிரத்து மாஇருள் நீங்கி,
நீடுஅமை நிவந்த நிழல்படு சிலம்பில்' ,, 205

புதல்இவர் ஆடுஅமைத், தும்பி குயின்ற
அகலா அம்துளை கோடை முகத்தலின்' ,, 225

'அந்தூம் புகல்அமைக் கமஞ்செலப் பெய்த
'துறுகாழ் வலசியர் தொழுஅறை வெளவி' ,, 253

'நடையரும் கானம் விலங்கி, நோன்சிலைத்
தொடைஅமை பகழித் துவன்றுநிலை வடுகர்' 295

'பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்
கண்திரள் நீள்அமைக் கடிப்பின் தொகுத்து' '' 331

'வாங்குஅமை புரையும் வீங்குஇறைப் பணைத் தோள்
'' 343

'நெடுங்கண் ஆடுஅமைப் பழுநிக் கடுந்திறல்
பாப்புக் கடுப்புஅன்ன தோப்பி வான் கோட்டுக்'
அகம் 348

'இந்நிலை அறியாய் ஆயினுஞ் செந்நிலை
அமைஆடு அம்கழை தீண்டிக், கல்லென' " 353

'அமைஅறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்'
" 388

'அவ் வாங்கு உந்தி அமைத்தோ ளாய்! நின்'
" 390

'உயங்குபிடி தழீஇய மதன்அழி யானை
வாங்குஅமைக் கழையின் நாலும்அவர்' " 398

'உடைக்கண் நீண்டுஅமை ஊறல் உண்ட
பாடுஇன் தெண்மணிப், பயம்கெழு பெருநிரை'
" 399

'வாங்குஅமைப் பழுனிய நறவுண்டு' —நற்றிணை 276

'நமக்கும் அரிய ஆயின அமைந்தோள்
மாண்புடைக் குறுமகள் நீங்கி' " 352

'வணர்இருங் கதுப்பின், வாங்குஅமை மென்தோள்'
—பதிற்றுப்பத்து 12-22

'வீங்குஇறைத் தடைஇய அமைமருள் பணைத்தோள்'
பதிற்றுப்பத்து 54

'இமைப்பு வரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோள்இணை மறந்தே'
கலித். 21

'வாங்குஅமை மென்தோள் குறவர் மடமகளிர்'
கலி. 39

'வாடிய மென்தோளும் வீங்கின
ஆடுஅமை வெற்பன் அளித்தக்கால் போன்றே'
கலி. 43

'அகன்மலை யடுக்கத்த அமைஏய்க்கும் என்பதோ'

கலித்தொகை. 45

அமை என்ற மூங்கில் வகையைக் கண்டுபிடிக்க மலையாள மொழி துணை புரிகின்றது. இந்த மூங்கிலை மலையாளத்தில் இன்றும் 'அம்மெய்' (Ammei) என்று அழைப்பர். இந்த மூங்கில் கேரளத்தில் நிறையக் காணப் படுகிறது.

அமையின் கணுவுக்கு மகளிரின் தோள் உவமமாகப் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. இந்த ஒப்புமையும் பொருத்தம்தான். அமையின் தூம்பினுள் மதுவை வைத்து உண்டனர் என்பது தெரிகின்றது. வளைந்து கொடுக்கும் அமையில் வில் செய்வதும் கூறப்பட்டுள்ளது. அமைகள் ஒன்றோடு ஒன்று உரசி, எரி காற்றால் பரவியது கூறப் பட்டுள்ளது.

அமையின் தண்டில் துளையுண்டானதால் காற்று அத் துளையில் செல்லும்போது குழலின் இசை போலக் கேட்ட தைப்பற்றியும் கூறியுள்ளனர்.

அமையை அறுத்து ஓசையிடும் தட்டையைச் செய்தலும் கூறப்பட்டுள்ளது. அமையின் உள்ளே உள்ள மெல்லிய தோலியைப் பிசைந்த துகள் போல நாரையின் இறக்கை களில் தூள் இருந்ததைக் கூறியிருப்பது அரிய உண்மையான உவமையாகும்.

அமையின் தூம்பில் தேனை ஊற்றி மதுவாக்கித் தோப்பி என்ற மதுவை உண்பர் என்று கூறப்பட்டுள்ளது. அமை மூங்கிலை Ochiandre scriptorica என்று அறிவியலில் அழைப்பர்.

சங்க நூல்களில் வேய் என்ற மூங்கிலும் கூறப்பட்டுள் ளது.

'வெயில்புளி சோலையவேய் உயர் சுரனே'

ஐங்குறுநூறு 327

'குன்ற வேயில் திரண்ட என்
மென்தோள் அஞ்ஞை சென்ற ஆறே' அகம். 15

'கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்' ,, 17

'ஓய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க
வேய்கண் உடைந்த வெயில்அவிர் நனந்தலை' ,, 91

'நீசெலற்கு உரிமை நெஞ்சே வேய்போல்
தடையின் மன்னும் திண்ணிய திரண்ட
பெருந்தோள் அரிவை ஒழியக் குடாஅது' அகம். 199

'காய்கதிர் கடுகிய கவின்அழி பிறங்கல்
வேய் கண் உடைந்த சிமைய' ,, 399

'மாயம் அன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெரு வரைஅகந்தொறும் நற்றி.294

'வேய்எழில் வென்றுவெறுத்ததோள் நோக்கி'
பரிபாடல் 11:94

'அடியுறை மகளிர் ஆடும் தோளே
நெடுவரை அடுக்கத்து வேய்போன் றனவே'
பரிபாடல் 14: 5- 6

'வெடிவேய் கொள்வது போல ஓடித்
தாவுபுஉகளும் மாவே பூவே' புறம்.302

'வேய்அன்ன மென்தோளால்
மயில்அன்ன மென்சாயலார்' புறம்.395

'பூவொடு புரையும் கண்ணும் வேய்என
விறல்வனப்பு எழிலிய தோளும் பிறைஎன'
குறுந்தொகை 226

'வேய்புரைபு எழிலிய விளங்குஇறைப் பணைத்தோள்
பதிற்றுப்பத்து. 65 : 8

'கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலான்'-கலி.11
'விடியல் வெங்கதிர் காயும் வேய்அமல்அகல் அறைக்'
கலித்தொகை 54

சங்க நூல்களில் வேயைப் பற்றிப் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. மேற்காட்டிய பாடல்களிலெல்லாம் வேய் என்ற மூங்கில் கூறப்பட்டுள்ளது.

வேயினால் பந்தர் போடுவதும் வில் செய்வதும் கூறப் பட்டுள்ளது. வேயின் அரிசியும் கூறப்பட்டுள்ளது.

கன்னட மொழியில் வேய் என்ற சொல்லே ஒருவகை மூங்கிலின் பெயராக வழங்குவதிலிருந்து வேய் என்பது எது வென்று தெரிந்து கொள்ளலாம்.

கூரை வீடுகளில் இந்த மூங்கில் வேய்வதற்குப் பயன் படுத்தியதால் வேய் என்றழைக்கப்பட்டது.

வேய் உயர் நனந்தலை (அகம்.51) வேய் உயர் (ஐங்குறு நூறு 32) வேய் ஒழுக்கு (அகம். 213) வேய்க்கண் (அகம்.573) வேய்கரி கானம் (அகம் 55, சிலப்பதிகாரம் 13:36, மணி மேகலை 17 : 91) வேய்கொள் அரிசி(மலைபடு. 435), வேய்த் திரள் பந்தர் (சிலப்பதிகாரம் 13 : 104) வேய்தரல் விடர கம் (கலி. 40) வேய்ப்புறம் (தொல்காப்பியம் 111 : 61,3) வேய்ப்படு நனந்தலை (அகம்.295) வேய்பயில் அடுக்கம் (நற்றிணை 93, அகம். 312, 323) வேய்பயில் அழுவம் (நற்றிணை 46. 62, குறுந்தொகை அகம். 318. 327), வேய் பயில் இறும்பு (நற். 213, 264) வேய்பயில் சோலை (பரி பாடல் 11-25) வேய்பிறங்கசுழுவம் (நற்றிணை 62) வேய்வில் எயினர் (சிலப். 12-6:4) என்று பல பாடல்களில் வேயைப்பற்றிச் செய்திகள் வருகின்றன. இதை அறிவியலில் Ochlandra Travancorica என்று அழைப்பர்.

'கல்முகை விடர்அகம் சிலம்ப வீழும்
காம்பு தலைமணந்த ஓங்குமலைச் சாரல்' அகம்.172

'மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்' ,, 209

'மூங்கில் இளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியல்அகம் வெம்ப, மழைமறந்து'- அகம். 241

' பழம்தூங்கு விடரகத்து எழுந்த காம்பின்
கண்இடை புரையும் நெடுமென் பணைத்தோள்'
,, 271

' நாம்செலின், எவனோ தோழி, காம்பின்
வனை கழை உடைந்த கவண் விசைக் கடிஇடி' ,, 309

' யாம் பல புணர்ப்பச் சொல்லாள் காம்பொடு
நெல்லி நீடிய கல்அறைக் கவாஅன்' ,, 385

' யாங்குச் செய்வாம்கொல் தோழி! ஓங்குகழைக்
காம்புடை விடர்அகம் சிலம்பப், பாம்புஉடன்று'
—நற்றிணை 51

' ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை!
காம்பு தலைமணந்த கல்அதர்ச் சிறுநெறி' ,, 55

' நூற்றிதழ்த் தாமரைப் பூச் சினை சீக்கும்
காம்பு கண்டன்ன தூம்புடை வேழத்து'
ஐங்குறுநூறு 20

' காம்பு சொலித் தன்ன அறுவை உடீஇப்'
—சிறுபாணாற்றுப்படை 236

காம்பு என்ற பெயர் ஒருவகை மூங்கிலுக்கு வழங்குகின்றது.

காம்பின் உள் தொலிபோல் துணி மென்மையாக இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. காம்பு என்ற பெயரே இக்காலத்தில் பேச்சு வழக்கில் பயில்கின்றது.

காம்பு என்ற மூங்கிலை அறிவியலில் Oxytenanthera Bourdillon என்றழைப்பர்.

தொல்காப்பியத்தில் விசை என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இதைப்பற்றிச் சங்க நூல்களிலோ பிற்கால நூல்

களிலோ யாதொரு குறிப்புமில்லை. ஆனால் இதனை ஒரு வகை மூங்கிலாகக் கருதலாம்.

> மூங்கில்களில் சில வகையை மடக்கும்போது போது, விசைத்து வில்போல் எழும். ஆதலின் ஒரு வகை மூங்கிலை விசையென்று அழைத்திருக்கலாம்.

மேற்கோள் நூல்கள்:

1. Flora of Madras Presidency—J.S. Gamtle.
2. The Bombuseae of British India J. S. Gamtle.

## யா மரம்

'நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள வியம்புங்
கடுங்கதிர் இருகிய வேய்பயில் பிறங்கற்;
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்
தருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கின் —அகம். 17

'மன்னுயிர் மடிந்த மழைமா றமையத்
திலையில வோங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்கு' ,, 31

'கவைமுறி யிழந்த செந்நிலை யாஅத்
தொன்றாங் குயர்சினை யிருந்த வன்பறை
விளைப் பருந்தின் கோள்வல் சேவல்' ,, 33

'ஆள்வழக் கற்ற சுரத்திடைக் கதிர்தெற
நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை' ,, 51

'மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளி சுடர்
வான்தோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன' ,, 65

'மனையுறை கோழி யணற்றாழ்பு அன்ன
கவைமயொண்டளிர கருங்கால் யாஅத்து
வேனில் வெற்பிற் கானலங் காய' ,, 187

'அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை
குறும்பொறை யெழுந்த நெடுந்தாள் யாஅத்
தருங்கவட் டுயர்சினைப் பிள்ளையூட்ட ,, 193

'மிசைமரஞ் சேர்த்திய கவைமுறு யாஅத்து
நாரரை மருங்கின் ஈர்வரப் பொழித்துக்
களிறு சுவைத் திட்ட கோதுடை ததரல்' ,, 257

'நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்'
,, 263

'ஓல்குநிலை யாஅத் தோங்குசினை பயந்த
வல்குறு வரிநிழ லசையின நோக்க' ,, 287

அகநானூற்றில் 15 பாடல்களிலும் குறுந்தொகையில் 5ம், நற்றிணையில் 2 பாடல்களிலும், மலைபடுகடாம் 428 லும், ஐங்குறுநூறு 388லும் யா மரம் குறிப்பிடப் பெற்றுள்ளது.

'யாஅ வொண்டளிர் ஆக்குவிதிர்த் தன்னநின்
னாக மேனி யம்பசப்பு ஊர' , 333

'சாரல் யாஅத் துயர்சினை குழைத்த
மாரி மீர்ந்தளிர் அன்ன மேனிப்' ,, 337

'கண்பொரி கவலைய கானத் தாங்கண்
நனந்தலை யாஅத் தந்தளிர்ப் பெருஞ்சினை
யில்போல் நீழற் செல்வெயி லொழிமார்' ,, 343

'உரற்கால் யானை யொடித்துண்டு எஞ்சிய
யாஅ வரிநிழற் றுஞ்சும்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே'
குறுந்தொகை-232

'பொத்தில் காழ வத்த யாஅத்துப்
பொரியரை முழுமுதல் உருவக் குத்தி
மறங்கெழு தடக்கையின் வாங்கி உயங்குநடைச்
சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்
தடமருப் பியானை கண்டனர் தோழி' ,, 255

'பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்' ,, 37

'யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருண் முதல் பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு' ,, 198

'மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குடை மடப்பிடி வருத்த நோனாது
நிலையுயர் யாஅந் தொலையக் குத்தி
வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணாந்'
,, 307

'புன்தலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமிறு கடியுங் களிறே தோழி' —அகம்-59

'நெடுநிலை யாஅம் ஏறும் தொழில' —நற்றி.186

'தேம்பட மலர்ந்த மராஅ மெல்லிணரு
மும்பல கைத்த வொண்முறி யாவுந்
தளிரொடு மிடைந்த காமர் கண்ணி
திரங்குமர னாரிற் பொலியச் சூடி'
மலைபடுகடாம் 428

(பி. பேதம்) 'ஆச்சாவிற் பூவும்—யாம் பூவும்'

'சேயின் வருஉம் மதவலி யாவுயர்ந்
தோமை நீடிய கானிடை அத்தம்' —நற்றிணை - 198

'நெருப்பவிர் கனலி யுருப்புச் சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீ இச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை செறிதொடிப்'
—ஐங்குறுநூறு. 388

'வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை' — அகம்,19

சங்க நூல்களில் 'யா' என்றொரு மரம் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. பெரும்பாலான சங்கப் பாடல்களில் இம் மரத்தின் பெயர் 'யாஅ' எனறழைக்கப்பட்டுள்ளது. தொல் காப்பியத்தில் 'யா' என்று இம் மரம் அழைக்கப்பட்டுள்ளது.

'யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே'
—தொல்காப்பியம்; எழுத்ததிகாரம் : 229

என்று வரும் சூத்திரத்தில் 'யா மரம்' என்று அழைக்கப் பட்டுள்ளது.

யாமரம் இலையுதிர் காடுகளில், பாலையாக மாறும் காடுகளில் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

நெடுநிலை யா

நிலையுயர் யா

யாவுயா நனந்தலை

நெடுந்தாள் யா

ஓங்குதலை யா

என்று முற்காலத்தில் கூறப்பட்டிருப்பதால், யா மரம் மிக உயர்ந்து வளரும் மரம் என்று தெரிகின்றது.

மேலும், கருங்கால் மரம் என்று சொல்லப்பட்டிருப்ப தால் அடிமரம் கருப்பாயிருக்கும் என்பது தெரிகின்றது.

முதிர்ந்த மரத்தின் அடிப்பாகம் கருப்பாயிருக்கு மென்று வனத்துறையினர் கூறுவர்.

யாமரம் அறிவியற்படி எது வென்று அறிய இதன் தளிர் பற்றிய பழைய செய்திகள் உதவுகின்றன.

'கோழி யனற்றாழ்பு அன்ன கவை ஒண்தளிர்' என்று கூறியிருப்பதைக் காணலாம். கோழியின் தாடையில் இருபக்கமும் தொங்கும் சதைப் பாகம் போல் இரண்டாகப் பிரிந்து காணப்படும் இலை என்று கூறினயுள்ளனர். தளிர் முன்பக்கத்தில் இரண்டாகப் பிரிந்து காணப்பட்டதையே 'கவை யொண் முறி' என்றசொற்றொடர் குறிப்பிடுகின்றது.

## மந்தாரை இனம்

இதன் இலை, கவை முறியாத்துஎன்றும், கவைமுறியென் றும் அகநானூற்று 257 ஆம் பாடலிலும் 33 ஆம் பாடலிலும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறான இலையுடைய மரங்கள் காடுகளில் காணப்படும். இவை மந்தாரை இனத்தைச் சேர்ந்தவையே. இவைகளை 'Bauninia' என்றழைப்பர். இந்த மரங்களுக்குக் கவை இலை (Bilobed leaf) உண்டு. ஆனால் இவ்வினத்தின் இலை பெரிதானவை.

காடுகளில் இவ்விலைகள் போன்ற சிறியதான இலை களைக் கொண்ட ஒரே மரம் யா மரமேயாகும். இது Hardwickia Binata என்று அழைக்கப்படும். இதை இம்மரம் என்று உறுதியாகக் கூறக் குறுந்தொகையில் வரும் ஒரு பாடற் செய்தி துணை செய்கின்றது.

> பொத்தில் காழ அத்த யாஅத்து
> பொரியரை முழுமுதல் உருவக் குத்தி
> மறங்கெழு தடக்கையின் வாங்கி உயங்குநடை
> சிறுகட் பெருநிரை உறுபசி தீர்க்கும்
> தடமருப் பியானை

என்று குறுந்தொகை (255) கூறுவது கவனிக்கத்தக்கது. யாமரத்தைக் குத்தித் தடக்கையால் எதையோ வாங்கி யானை நிரைக்கு ஆண் யானை தருவதாகக் கூறப்பட்டுள் ளது. அவ்வாறு வாங்கி, யானை தருவது என்ன என்று ஆராய்ந்தால் ஓர் உண்மை வெளியாகின்றது. இதன் அடிமரத்தினுள் ஒரு வகை எண்ணெய் உண்டு என்று கூறப் பட்டுள்ளது.

Trees of Hardwickia Binate speceies above 5 feetin girth are tapped for an oil. A hole is bored in to this tree with an auger about 8 feet above the surface of the soil and must reach the pith A tree will give from Four to Sixteen gallons of Oil' — N. L. Bor, in 'The Manual Indian Forest Botany.'

யாமரத்தைக் குத்தி அதன் வைரத்தை அணுகினால் 4 காலனிலிருந்து 16 காலன் வரை ஒரு வகை எண்ணெயைத் தரும் என்று N. L. Bor எனும் வனத்துறை அறிஞர் கூறி யிருப்பதை இது சார்பாக எண்ணிப் பார்க்க வேண்டும்.

யானை நீருக்காகவும் உணவுக்காகவும் இந்த எண் ணெயை மரத்தைக் குத்தி வாங்கித் தன் நிரைக்குக் கொடுத்த தாகக் கூறப்பட்டுள்ளது அரிய செய்தியாகும்.

## ஆச்சா மரம்

இச் செய்தியிலிருந்து இம் மரம் தற்காலத்தில் ஆச்சா என்றழைக்கப்படும் 'யா' மரம் என்பதில் ஐயமில்லை.

ஆச்சா மரத்தில் தளிர் இலை மென்மையானதும் அரக்குத் தெளித்தாற் போல் புள்ளிகள் உள்ளதாகவும் கூறப்பட்டிருப்பதையும் கவனிக்க வேண்டும். இந்தத் தன்மை களையெல்லாம் கொண்ட மரம் ஆச்சா என்று இக்காலத் தில் அழைக்கப்படும் யாமரம் என்பதில் ஐயமில்லை.

# வஞ்சி

'பகன்றை பலாசம் பல்பூப் பிண்டி
வஞ்சி பித்திகஞ் சிந்து வாரம்'

குறிஞ்சிப்பாட்டு 88-89

'வஞ்சி யோங்கிய யாணை ரூர'

ஐங்குறுநூறு 50

'பல்வேள் மத்தி கழாஅல் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரி'

அகம். 286

'ஆற்றலுடைய னரும்பொறி நல்லூரன்
மேற்றுச் சிறுதாய காய் வஞ்சி — போற்றுருவிக்
கட்டக முத்திற் புதல்வனை மார்பின்மேற்
பட்டுரு சிதைப்ப வரும்'.

ஐந்திணை எழுபது 45

மேற்பாகத்தில் சிறிய காயானது பொருந்திய வஞ்சி மரம் போன்று என்ற உவமை பயில்வதைக் காணலாம். இந்த ஒரே ஒரு பாடலில் தான் வஞ்சிமரத்தின் காய் மட்டும் கூறப்பட்டுள்ளது. இலையோ பூவோ வேறு எந்தப் பாடல் களிலும் கூறப்படவில்லை.

வஞ்சி யென்றொரு மரம் நான்கு பாடல்களில் கூறப்பட்டுள்ளது. பிற விடங்களில் வஞ்சியென்ற பெயர், வஞ்சி நகரத்தைப் பற்றியும் திணையைப் பற்றியும் பாட்டைப் பற்றியும் கூறியுள்ளது.

வஞ்சியென்றது ஒரு கொடியை என்பாருமுளர். வஞ்சி என்பது கொடியல்ல, ஒரு மரமாகும்.

காஞ்சியைப் போலவே ஆற்றோரங்களிலும் நீர் நிலையருகிலும் வளரும் மரமாகும்.

(Usually near Water streams, The Indian willow)

மருதமரத்தொடு வஞ்சி மரத்தையும் சாய்த்து பெருநீர்க் காவிரி வந்ததாக ஓர் அகநானூற்றுப் பாடல் கூறியுள்ளது. காஞ்சியும் வஞ்சியும் நன்கு வளைந்து கொடுக்கும் மரங்களாகும். ஆதலின் ஆங்கிலத்தில் Willow என்றமரத் தன்மையை ஒத்துள்ளதாகும்.

வஞ்சி என்ற பெயர் இன்றும் இம்மரத்திற்கு அருகி வழங்குகின்றதால் எதுவென்று அறிய முடிகின்றது. அறிவியலில் இம் மரம் Salix tetra seperma என்றழைக்கப்படும்.

காஞ்சி என்ற நகரத்தின் பெயரே காஞ்சி மரம் நிறைய இருந்த காரணத்தால் பெற்ற பெயராகும். அதுபோன்றே வஞ்சி என்ற நகரத்தின் பெயரும் வஞ்சி யென்ற மரத்தால் வந்த பெயராகும்.

மதுரை என்ற பெயரே மிகப் பண்டைக் காலத்தில் மருதை என்று வழங்கியிருக்கலாம். பின்னர் மக்கள் வாயில் மதுரை என்று மாறியிருக்கலாம்.

மதுரை என்ற நகர்ப் பெயர்க் காரணத்தைப் பற்றி பின்னர் கூறிய புராணக் கதை நம்பத் தகுந்ததன்று.

திருமருதந்துறை என்ற ஊர்ப்பெயர் இருந்ததை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். சேரர் தலைநகரம் வஞ்சி, மரத்தால் பெயர் பெற்றது போல, தொண்டையர், பல்லவர் தலைநகரம் காஞ்சி மரத்தால் பெயர் பெற்றது போல, மதுரையின் பெயரும் மருதமரத்தால் பெற்றிருக்க வேண்டும்.

# வழை

சங்க நூல்களில் வழை என்றொரு மரம் கூறப்பட்டுள்ளது. இதனை உரையாசிரியர்கள் சுரபுன்னை என்றழைப்பர்.

'கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை
பலாஅமல் அடுக்கம் புலாவ ஈர்க்கும்
கழைநரல் சிலம்பின் ஆங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் அசும்பில் அகம். 8:6-9

'தேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்
கழையமல் சிலம்பின் வழைதலை வாடக்
கதிர்கதங் கற்ற வேக னெறியிடை' —அகம். 177:6-8

'வழையம லடுக்கத்து வலனேர்பு வயிரியர்
முழவதிர்ந் தன்ன முழக்கத் தேறோடு
உரவுப்பெயல் பொழிந்த நள்ளென் யாமத்' ,, 328 1-3

'வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி' கலித். 50

'வறனுறல் அறியா வழையமை நறுஞ்சாரல்
விறன்மலை வியலறை வீழ்பிடி யுழையதா' ,, 53

'கழைவளர் நெல்லின்அரியுலை யூழ்த்து
வழையமை சாரல் கமழத் துழைஇ' மலைபடு. 180-181

'கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை' குறிஞ். 8

'வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயன் மாறிய கழைதிரங்கு அத்தம்'
பதிற்'41:13-14

'ஒளிதிகழ் உத்தி, உருகெழு நாகம்
அகரு வழைஞெமை யாரம் இனையத்' பரி. 12-45

'கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
ஆசினிக் கவினிய பலவி னார்வுற்று' புறம்.158:21-22

'மண்ணெடுத் துண்ணும் அண்ணல் யானை
வண்தேர்த் தொண்டையர் வழையமல டுக்கத்து'
குறுந்தொகை 260

உரையாசிரியர்கள் சுரபுன்னை என்று பொருள் கூறியி ருப்பதால் இந்த மரம் எதுவென்று கண்டுகொள்ள முடி கின்றது. சங்கநூல்களில் மலைகளிலும் மலைச்சாரல்களிலும் இந்த மரம் கூறப்பட்டுள்ளது. வழையமை சாரல், வழைய மல் அடுக்கம் என்ற வர்ணனையால் இந்த மரம் குறிஞ்சி யில் இருப்பதாகத் தெரிகின்றது.

இந்த மரம் Evergreen forests என்ற பச்சிலைக் காடுகளில் வளர்கின்றது.

'வறனுறலறியா வழையமை நறுஞ்சாரல்' என்று கலித் தொகை கூறுவதைக் கவனிக்க வேண்டும். இந்த மரம் வாழும் சூழ்நிலையில் வறட்சியே இருக்காது என்று கூறப் பட்டுள்ளது.

கலித்தொகை 50ஆம் பாட்டில் வருடை எனப்படும் வரையாடு வாழும் உச்சியில் வழை மரம் காணப்பட்ட தாகக் கூறியதும் கவனிக்கத் தக்கதாகும்.

ஒரே ஒரு பாட்டில் குறிஞ்சி திரிந்த பாலையில் வழை கூறப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் பாலை என்பது பாலை வனம் அன்று. முல்லையும் குறிஞ்சியும் கொண்டுள்ள காடு கள், கடுங்கோடை வறட்சியால் பாலை போன்று மாறும். அண்மையில் நீலகிரியில் உள்ள முதுமலைக் காடுகள்கூடக் கடும் வறட்சியினால் நீரற்றும் பாலை போன்று ஆயின.

'மாவங் கோங்கங் குடப்புரை காய்வழை' (1912)

என்று சிவக சிந்தாமணிப் பாடல் கூறுவதால் வழைக்கு குடத்தை ஒத்த காய் உண்டு என்று கருத வேண்டியுள்ளது.

இங்கு வழையென்பதற்குச் சுரபுன்னையென்றே பொருள் கூறப்பட்டதையும் கவனிக்க வேண்டும்.

வழை மலைக் காடுகளில் (பச்சிலைக் காடுகளில்) Evergreen forests வளரும் மரமாகும். குறிஞ்சிப்பாட்டில் கோடல் என்ற காந்தளையும் கைதை என்ற தாழையையும் சேர்த்து வழையையும் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

கடற்கரையில் காணப்படும் தாழையுடன் வழை காணப் படாது. இதைத் திணைமயக்கம் என்றும் விளக்கமுடியாது.

குறிஞ்சிப்பாட்டு ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் நாட்டில் உள்ள மரஞ் செடி கொடிகளின் பெயர்களைப் புரிந்து கொள்ள எழுதப்பட்டதாகும்.

உயர்ந்த பச்சிலை மலைக்காடுகளில் காணப்படும் இம் மரத்தை அறிவியலில் Ochrocarpus longifolius என்றழைப்பர். மேற்குத் தொடர்ச்சி மலையில் எளிதாகக் காணப்படும்; இதை இக் காலத்தில் சுரபுன்னை என்றழைப் பர்.

வழையே சுரபுன்னையாகும். நாகத்தைச் சில உரை யாசிரியர்கள் கூறியிருப்பினும் அது தவறு. நிகண்டுகளில் வழை மரத்தையேதான் சுரபுன்னை என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. ஆதலின் வழையே சுரபுன்னை என்பதில் ஐயமில்லை.

கடற்கரையில் காணப்படும் புன்னைபோலச் சுரத்தில் காணப்பட்ட மரத்தைச் சுரபுன்னை என்று பிற்காலத்தில் அழைத்தனர். இது கடற்கரையில் வாழும் புன்னையினத்

தைச் சேர்ந்தது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். ஆதலின் தமிழில் கடற்புன்னையிலிருந்து வேறுபடுத்த 'சுரபுன்னை' என்று இம் மரத்தை அழைத்தனர்.

மேற்கோள் நூல்கள்:

1. A Manual of indian forest botany
N. L. Bor O.U.P.
2. The Useful plant of India - C.H. Drury
3. Flora of the presidcncy of Madras,
J.P. Ganble.

# வாகை

'யார்சொல் அளியர் தாமே யாரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயில் அழுவ முன்னி யோரே' குறுந். 7

'மல்குசுனை புலர்ந்த நல்கூர் சுரமுதற்
குமரி வாகைக் கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் தோன்றும்
கான நீளிடைத் தானு நம்மொடு' குறுந். 347

'அத்த வாகை யமலை வாநெற்று
அரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்' ,, 369

'மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயன்புஅமல் அறுகை' அகம். 136

'வடவனம் வாகை வான்பூங் குடசம்'

குறிஞ்சிப் பாடல் 67

'வாகை ஒண்பூப் புரையு முச்சிய
தோகை யார்குரல் மணந்து தணிந்தோரை'

பரிபா. 14: 6-7

'சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த' பதிற்றுப். 40-15

'துய்வீ வாகை நுண்கொடி உழிஞை' ,, 43:2 3

'கடவுள் வாகைத் துய்வீ ஏய்ப்ப' ,, 66:1 5

'சுடர்வீ வாகை நன்வற் தேய்த்து' ,, 88:10

வாகை என்றொரு மரத்தைப் பலரும் பார்த்திருக்கலாம். இது வறட்சியான இலையுதிர்க் காடுகளில் மிகுதியாகக் காணப்படுகின்றது.

இதன் இலையைக் கவைத்தது என்று அகம். 136 ஆம் பாடல் கூறுகின்றது.

ஒரே காம்பில் எதிர் எதிராக இரட்டைச் சிறு இலைகள் வரிசையாக இருப்பதால் கவட்டிலை என்றழைத்தனர்.

வாகையின் பூவை மயில் தலையில் உள்ள உச்சி இறகு மயிருக்கு ஒப்பிட்டு 'வாகை ஒண் பூ புரையு முச்சிய தோகை' என்று குறுந்தொகையில் கூறப் பட்டுள்ளது. பரிபாடலிலும் இந்த உவமை கூறப்பட்டுள்ளது.

இதன் பூவில் இளம்பச்சை நிறமுள்ள மகரந்தத் தாள்கள் கம்பிபோல நீண்டு குஞ்சமாகக் காணப்படும். இதை மயிலின் உச்சிக்கொண்டை இறகுகளுக்கு ஒப்பிட்டது பொருத்த மாகும்.

சுடர்வீ வாகை என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. சுடர்க் கற்றை போல மகரந்தத் தாள்கள் காம்புமுனையி லிருந்து நீண்டு விரிந்திருப்பதால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

இதன் காய் வெயில் காலத்தில் நெற்றாக மாறிவிடும் இந்த நெற்றுகள் கோடைக்காற்றில் ஒலிக்கும். இந்த நெற்று களில் உள்ள காய்ந்த விதைகள் காய்ந்த தோலுறைக்குள் கிலுகிலுப்பை போல ஒலிக்கும்.

> ஆரியர் கயிறாடும்போது பறையொலிப்பது போலக் காற்றில் அடிபட்டு வாகை நெற்றுகள் ஒலிக்கும்.

என்று குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளது. மற்றும் சிலம்பில் பரல் ஒலிப்பது போல் ஓசை யிட்டதாகக் கூறப்பட் டுள்ளது இவை அழகிய உவமைகளாகும். வெண்ணெற்று என்று கூறியதும் உண்மையே.

இப்போது காட்டுவாகை என்றொரு மரம் அழைக்கப் படுகிறது. இதையே தூங்குமூஞ்சி மரம் என்று அழைப்பர். இந்தக் காட்டுவாகைக்கு நாட்டு வாகைக்கு இருப்பது போல, காற்றில் ஒலிக்கும் நெற்று கிடையாது. ஆனால் பூ ஒன்று போல இருக்கும்.

காட்டுவாகையின் மகரந்தத் தாள்கள் சிறிது சிவப்பா யிருக்கும். வாகை மரம் சேரநாட்டு மன்னன் நன்னனுடைய அடையாள மரமாக இருந்தது. வாகை மரத்தினடியில் மன்றம் அமைப்பது கூறப்பட்டுள்ளது. வாகை மன்றம், வாகைப் பறந்தலை, வாகைப் பெருந்துறை ஆகியவை கூறப் பட்டுள்ளன.

வெற்றிக்கு அறிகுறியாக வாகைப் பூவை அணிவர். இதிலிருந்து வாகைத்திணை தோன்றியது. வாகை மரத்தை Albizzia lebbeck என்று அறிவியலில் அழைப்பர்.

# விடத்தேர்

பதிற்றுப்பத்து 13 ஆம் பாட்டில் 'திரிகாய் விடத்தரொடு காருடை போகி' என்ற வரி வருகின்றது. இதற்கு எழுதிய குறிப்புரையில் உ. வே சாமிநாதய்யர்,

'திரிந்த காயையுடைய விடத்தேரை யென்னும் முள் மரத்தோடு கரிய உடை மரமும் வளரப்பெற்று, விடத்தர், உடை: முள் மர வகைகள்.

'விடத்தர் என்பது விடத்தேர். விடத்தேரை, விடத்தே தொடர எனவும் வழங்கும்' (பெரும்பாணாற்றுப் படை 184-5; நற்றிணை குறிப்புரை) என்று எழுதியுள்ளார்.

'முள்ளுடுத் தெழுகாடோங்கிய தொழுவுடைய வரைப் பிற்' என்ற பெரும்பாணாற்றுப்படை வரிக்கு நச்சினார்க் கினியர்.

'முள்ளுத் தன்னிடத்தே சூழ்ந்து எழுகின்ற விடத்தே தொடரி முதலிய காடுகள் சூழ்வளர்ந்த தொழுக்களை யுடைய ஊர்களில்' என்றும் உரை கூறியுள்ளார். இதற்கு அடிக்குறிப்பாக உ. வே. சாமிநாதய்யர் 'விடத்தே தொடரி' —ஒரு வகை முள்மரம்; விடத்தர், விடத்தேரையென இம் முள் மரம் வழங்கும், 'திரிகாய் விடத்தரொடு' [பதிற்றுப் பத்து 13, 14]; 'தள்ளா விடத்தேர்' [தண்டி. மேற்]; 'விடத்

தேரை மற்றும் வனம்', 'திருவரங்கத்தந்தாதி' : 931 என்று எழுதியுள்ளார்.

விடத்தேர் என்று சங்க நூல்களில் பதிற்றுப்பத்தில் மட்டும் வரும் இந்த மரம் இன்று 'விடத்தலை' என்று வழங்குகின்றது. விடத்தாரி என்றும் அழைக்கப்படும். ஆனால், நச்சினார்க்கினியர் கூறிய விடத்தே தொடரி என்ற பெயரில் தொடரி என்பது வேறு ஒரு தனிமரம் என்று தெரிகின்றது.

ஊர்மன்றத்திலே விடத்தலை குச்சியை நட்டு, சத்தியம் செய்யச் சொல்லி, மறுநொடியில் துளிர்விட்டுத் துளிர்த்தால் உண்மை என்ற நம்பிக்கை நிலவுகின்றது.

இந்த விடத்தேர் என்ற மரம் பாலைப் பிரிவுக்கான வறட்சியான இடங்களில் வளரும் என்று அறிவியலார் கூறுவர். ஆதலின் இது நட்டவுடன் துளிர்த்ததால் சத்தியம் செய்தது உண்மையென்று கருதினர்.

காடுகளிலும் கற்பாங்கான இடத்திலும் வளர்வதாகவும் கிளைகளில் முட்களையுடையதாகவும் (grows in dry forests and on stony hills, shrub or small tree with strong branches) கூறுவர்.

இதன் காய் முறுக்கிட்டுக் காணப்படும் (Twisted pods என்றும் இதன் காய் வர்ணிக்கப்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்தில் திரிகாய் விடத்தர் என்று கூறியுள்ளது. இந்த மரத்தை Dichros tachys Cinerea என்று அறிவியலில் அழைப்பர்.

இதன் வடமொழிப் பெயர்களாக வரும் வெல்லாந்தரா Vellantrara Vtravriksha, Virataru ஆகியவை தமிழ்ப் பெயரின் அடிப்படையாகத் தோன்றியவையாகத் தெரிகின்றன.

தமிழில் விடத்தால்லா, விடதாரா, விடத்தரவேர் என்றும் மலையாளத்தில் விடத்தாள் என்றும் அழைக்கப் படும்.

கன்னடத்தில் Wadu என்றும் தெலுங்கில் Vetturu என்றும் இந்தியில் Vurtuli என்றும் அழைக்கப்படும்.

# வேங்கை

சங்க நூல்களில் வேங்கை மரம் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

'நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்கு பிதிர்ந்'
— சிறுபாணாற்றுப்படை 23 - 24

'கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்
நறும்பூக் கொய்யும் பூசலிருங்கே
ழேறடு வயப்புலிப் பூசலாடலனைத்து'
—மதுரைக்காஞ்சி 296 - 298

'தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை'
—மலைபடுகடாம் 305

'மணியென இழிதரும் அருவிப் பொன்னென
வேங்கை தாய வோங்குமலை யடுக்கத்து'
—நற்றிணை 28

'அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை'
" 112

'செம்முக மந்தி செய்குறி கருங்கால்
பொன்இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்'

நற். 151

'குறும்பொறை அயல நெடுந்தாள் வேங்கை
அம்பூந் தாதுக்கு அன்ன'

,, 157

'சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கை
பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅல்'

,, 168

'தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கை
பொன்புரை கவளப் புறந்தருபு ஊட்டும்'

,, 202

'நன்னாள் வேங்கையும் மலர்கமா இனியென'

— நற்றிணை 206

'கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை'

,, 222

'அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கைப்
பொன்மருள் நறுவீ கன்மிசைத் தாஅம்'

,, 257

'யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன்வீ
வேங்கை ஓங்கிய தேன்கமழ் சாரல்'

,, 259

'எரிஅகைந்து அன்ன வீததை இணர
வேங்கையைம் படுசினைப் பொருந்தி கைய'

,, 379

'கல்லயல் கவித்த கருங்கால் வேங்கை
அலங்கலந் தொடலை அன்ன குருளை'

,, 383

'நன்னாள் வேங்கை பொன்மருள் புதுப்பூ'

,, 384

'வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்' ,, 389

'வேங்கை தந்த வெற்புஅணி நன்னாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇ'
,, 396

'அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை'
—குறுந்தொகை 26

'கருங்கால் வேங்கை வியுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றும் காட்டிடை'
—குறுந். 47

'குறும்பொறைத் தடைஇய நெடுந்தாள் வேங்கைப்
பூவுடை யலங்குசினை புலம்பத் தாக்கி'
—குறுந். 134

'வேங்கை கமழுமெஞ் சிறுகுடி' —குறுந். 355

'கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅம் அவர்நாட்டு'
—ஐங்குறுநூறு 208

'பெருவரை வேங்கைப் பொன்மருணறுவீ'
—ஐங். 217

'கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
இருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்'
—ஐங். 219

'எரிமருள் வேங்கை யிருந்த தோகை'
—ஐங். 294

'வேங்கை வென்ற சுணங்கின்
தேம்பாய் கூந்தல் மாஅ யோளே' —ஐங். 324

' ... ... ... ... வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சி'
—பதிற்றுப்பத்து 41 - 10

'வேங்கை தாஇய தேம்பால் தோற்றம்
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரும்'

—அகநானூறு 48

'கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்'

,, 52

'நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை' ,, 85

'நல்லிசை வெறுக்கை தருமார் பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாள்மலர் உதிரக்
கலைபாய்ந்து உகளும் கல்சேர் வேங்கை'

,, 141

'நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற இரும்புதல் தாவும் நாட' ,,

'புலிஉரி வரியதள் கடுப்பக் கலிசிறந்து
நாட்பூ வேங்கை நறுமலர் உதிர' ,, 205

'முன்னிலை பொறாஅது முரணிப் பொன்னிணர்
புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்'

" 227

'ஓங்கல் மிசைய வேங்கை யொள்வீப்
புலிப்பொறி கடுப்பத் தோன்றலிற் கயவாய்
இரும்பிடி இரியுஞ் சோலை' " 228

'குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்
மன்ற வேங்கை மணநாள் பூத்த
மணியேர் அரும்பின் பொன்வீ தாஅய்' " 232

'அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்
சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்தாது
மணிமருள் கலவத் துறைப்ப அணிமிக்கு
அவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலை'

அகம். 242

'திருந்தரை நிவந்த கருங்கால் வேங்கை
எரிமருள் கவளம் மாந்திக் களிறுதல்' " 349

'வங்காழ் ஆட்டிய அங்குழை வேங்கை
நன்பொன் அன்ன நறுந்தாது உதிர' " 378

'உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய், தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்' —கலித். 38

'வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணம்'
" 43

'கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை
நனவிற்றான் செய்தது மனத்து தாகலிற்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
புதுவ தாக மலர்ந்த வேங்கையை
அதுஎன உணர்ந்துஅதன் அணிநலம் முருக்கி'
—கலித். 49

'கணிநிறை வேங்கை மலர்ந்துவண்டு ஆர்க்கும்,
அணிநிற மாலைப் பொழுது'
—திணைமொழி ஐம்பது 9

வேங்கை இலை மிகுந்த பச்சையாக இருக்கும். மலர் மஞ்சளாக இருக்கும்.

வேங்கை பூக்கும்போது அரும்பின்றி ஒரே சமயத்தில் மலரும் தன்மையுடையது. இதை நற்றிணை (122) கூறியுள்ளது.

வேங்கைக்கு மஞ்சளான பூ உண்டு. அதன் பூவை பொன்புரைக் கவழம் என்று நற்றிணை (202) கூறியுள்ளது.

முதல் நாளிலேயே பூத்த பொன்னிணர் என்று மலைபடு கடாம் (305) கூறியுள்ளது. நன்னாள் வேங்கை பொன் மருள்வீ என்றும் கூறப்பட்டுள்ளது.

வேங்கையின் பூ மஞ்சள் நிறமாக இருப்பதால் எரிமருள் வேங்கை என்று கூறப்பட்டுள்ளது.

வேங்கையின் பூ முதிரும்போது சிறிது சிவப்பாகும். அதையே நற்றிணை செவ்வீ (202) எனக் கூறியுள்ளது.

வேங்கையின் அடிமரம் கரிய நிறத்தை உடையதாகும். அதனால் கருங்கால் வேங்கை பொன்மருள் நறுவீ என்று நற்றிணை (257) கூறியுள்ளது.

வேங்கையின் புதுப்பூ ஒள்ளிய மஞ்சள் நிறமாக இருப்ப தால் பொன் செய்யும் கம்மியன் செய்த கைவினையான புது நகையை ஒக்கும் என்று நற்றிணை (313) கூறியுள்ளது. நெருப்பு குவிந்தது போன்று பூத்த வேங்கையின் கொத்து இருந்ததாக நற்றிணை (379) கூறியுள்ளது.

வேங்கையின் பொன்னிறப் பூவைப் போன்று அதன் பொன்னிறத் தாது கூறப்பட்டுள்ளது. நறும் பொன்னன்ன நறுந்தாது என்று அகநானூறு (278) கூறியுள்ளது. அரும்பு வாய்திறந்த பொன்புரை நுண்தாது என்று அகநானூறு (242) கூறியுள்ளது.

வேங்கையின் பூ மஞ்சள் நிறத்தில் இருப்பதால், பூ விழுந்து வரித்த கருமபாறை புலிக்குட்டி போலத் தோன்றியது என்று குறுந்தொகை (47) கூறியுள்ளது.

வேங்கையும் புலி ஈன்றன என்று நற்றிணை (380) கூறி யுள்ளது. புலியின் தோல்போன்று வேங்கையின் பூ மரத்தில் தோன்றியதாக அகநானூறு (205) கூறியுள்ளது.

வேங்கையின் பூ பாறையில் உதிர்ந்த தோற்றம் புலி போல இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள ஒரு வெள்ளைக்கார வேட்டையாளரின் அனுபவம் துணை செய் கிறது. தென்னாட்டில் ஏறக்குறைய 80 ஆண்டுகளுக்கு முன் காட்டு விலங்குகளை வேட்டையாடிய போலக் (Lieut. Colonel Pollock) தாம் எழுதிய நூலில் கீழ்வருமாறு ஓர் அனுபவச் செய்தியைக் கூறியுள்ளார்.

I saw something white under a tree close to me. It was panther's belly and I immediately fired. We waited for some time before apporaching the body and I pointed out thc wound to the Chief who declared that it was flower which had dropped form an over Hanging Kino Tree. It turned out to be leopard)

சிறுத்தைப் புலியின் வயிற்றைப் பார்த்து சுட்டதைக் கண்ட நண்பர், அது புலி இல்லையென்று கூறி, அது மேலே வீழ்ந்திருக்கும் வேங்கையின் (Kino Tree) பூ என்று கூறினா ராம். ஆனால் கூர்ந்து பார்க்கையில் வேங்கையின் பூ எனக் கருதியது கொல்லப்பட்ட சிறுத்தைப் புலியாகக் கிடந்ததாம்.

இந்தச் செய்தியிலிருந்து வேங்கைப் பூவைப் புலியெனக் கருதி ஏமாந்த வேட்டையாளியின் அனுபவத்தையே சங்கப் புலவரும் வேங்கைப் பூவிற்குப் புலியின் உடலை உவமை யாகக் கூறினர்.

அதன் காரணமாகவே வேங்கை மரத்திற்குப் புலியின் மறு பெயரான வேங்கை என்ற சொல் வழங்கிற்று.

பாயா வேங்கை என்றும் கூறப்பட்டது.

வேங்கை மரத்தின் காரணப் பெயருக்குப் பிறிதொரு சான்றும் கூறலாம். வேங்கை மரம் மலேயா நாட்டிலிருந்து பல நூற்றாண்டுகளுக்கு முன் நம் நாட்டில் பரவி இந்தியா வின் சொந்த மரம்போல் வளர்கின்றது என்று செடி நூலார் (Botanists) கூறுவர்.

வெளிநாட்டிலிருந்து வந்த வேங்கை மரத்திற்கு அதன் சூழ்நிலையில் அதைப் போன்றே காணப்பட்ட ஒரு விலங் கின் நிற உருவ ஒற்றுமை காரணத்தினாலே பெயரிட்டதைக் காண்கிறோம். பூத்த வேங்கை மரத்தைக் கண்ட யானை அதைப் புலியென்று கருதித் தாக்கியதாகவும் நற்றிணை (217) குறுந்தொகை (47) அகநானூறு (227) கலித்தொகை (49-38) பாடல்கள் கூறியுள்ளன. யானையின் கண்கள் சிறியன.

யானையின் பார்வை கூர்மையானது அன்று என்று வேட்டையாளர் கூறுவர். ஆனால் மோப்பம் பிடிக்கும் சக்தி மிக்கது.

அதனால் யானை பூத்த வேங்கை மரத்தைத் தாக்கியது உண்மையாக இருக்கலாம். இச் செய்தி மேலும் ஆராயத் தக்கது.

வேங்கையை ஆங்கிலத்தில் Malabar Kino என்றும் செடி நூலில் Pterocarpus Mursupium என்றும் அழைப்பர்

# வேம்பு

'பிறிதொன்று கடுத்தனள் ஆகி வேம்பின்
வெறிகொள் பாசிலை நீலமொடுசூடி' அகம். 138

'தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பில்' அகம். 309

'ஈன்பருந்துஉயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரிஅயரை வேம்பின் புள்ளி நீழல்' நற்றிணை 3

'சிறியிலை வேம்பின் பெரிய கொன்று' ,, 103

'பராரை வேம்பின் படுசினை யிருந்த' ,, 218

'வேம்பின் ஒண்பழம் முணைஇ இருப்பதை' ,, 279

'வேம்புநனை யன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு'
அகம். 76

'உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்'
குறுந்தொகை. 67

'வேம்பின் பைங்காய்என் தோழி தரினே' குறுந். 196

'இரும்பனம் போந்தைத் தோடும் கடுஞ்சினை
அரவாய் வேம்பின்அங்குழைத் தெரியலும்'
பொருநராற்றுப்படை 144-145

'கோட்டுஇணர் வேம்பின் ஏட்டலை மிடைந்த'
பெரும்பாணாற்றுப்படை 59

'வேப்புதலை யாத்த நோன்காழ் எஃகமொடு'
நெடுநல்வாடை 176

'மன்ற வேம்பின் மாச்சினை ஒண்தளிர்' புறம். 76

'குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்' " 77

'மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து' " 79

'தீம்கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ' " 281

'மன்ற வேம்பின் ஒண்பூ வுறைப்ப' " 371

'கான வேம்பின் காய் திரங்க' " 389

'வேப்புநனை அன்ன நெடுங்கட் கள்வன்'
ஐங்குறுநூறு 30

'அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய' " 389

'வேம்பின் ஒண்பூ உறைப்ப' " 350

வேப்ப மரத்தை வேம்பு என்று சங்க நூல்களில் அழைத்தனர்.

பெரிய அடிமரம் உள்ளதாக, பராரை வேம்பு என்று சங்க நூல்களில் குறிப்பிட்டுள்ளது. கரிய கிளைகளை உடையதாகவும் கூறப்பட்டுள்ளது.

வேம்பிற்குச் சிறிய இலை என்றும் அரவாய் உடைய இலை என்றும் உள்ளது.

வேம்பின் இலையோரம் அரம்போல் காணப்படும். இதை Dentate என்று செடிநூலில் கூறுவர்.

வேம்பின் பைங்காயைப்பற்றியும் கனியைப் பற்றியும் சங்க நூல்கள் கூறுகின்றன. வேப்ப மரத்தின் பழத்தைக் கிளி தன் அலகில் கௌவி எடுத்துச் செல்வது கூறப்பட்டுள்ளது. வௌவால் வேப்பம் பழத்தைத் தின்பதையும் கூறியுள்ளனர். வேப்ப மரத்தின் தளிர் பளபளப்பாகக் காணப்படும். இதையே ஒண்தளிர் என்று அழைத்துள்ளனர்.

வேம்பின் பூவைப் பற்றியும் கூறியுள்ளனர். வேம்பின் பூ காம்பொடு தோன்றுவது நண்டின் கண்ணிற்கு ஒப்பிடப்பட்டுள்ளது பொருத்தமான அழகிய உவமையாகும்.

நண்டின் கண் காம்புடன் தோன்றி வெளியில் தெரியும்.

வேப்பம் பூ உதிர்தலையும் கூறியுள்ளனர். வேப்ப மரத்தை Neem, Margosa என்று ஆங்கிலத்திலும் Azadirachta என்று செடி நூலிலும் அழைப்பர்.

★

